உ

சிவமயம்.

கணபதிதுணை.

# மாயூரப்புராணம்.

திரிசிரபுரம் மஹாவித்துவான்

## மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

இஃது

இந்நூல்செய்தவர்மாணாக்கருளொருவராகிய

சென்னைக்கவரன்மெண்டு நார்மல்பாடசாலைத்

தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்

சோடசாவதானம்

சுப்பராயசெட்டியாரால்

பார்வையிடப்பட்டு,

மாயூரத்திலிருக்கும் அரங்கக்குடி

முருகப்பிள்ளையவர்கள்குமாரர்

வயித்திலிங்கம்பிள்ளையவர்களால்

சென்னை

சி. டிக்குருஸது,

மலைச்சாலையிலிருக்கும் அத்திநீயம் அன்ட் டேவிநியூஸ் பிரான்ச்
அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

விபவஹு கார்த்திகைமீ

சிவமயம்.

## சிறப்புப்பாயிரம்

மாயூரப்புராணமரங்கேற்றுவித்தவர்மேல்

சென்னைக்கவரன்மெண்டுநார்மல்பாடசாலைத்தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்.

சோடசாவதானம்

# சுப்பராயசெட்டியார்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்பூத்தபல்வளமுமல்குபெரும்பூங்குடியிற்செழித்துவாழ்வோ
னேர்பூத்தகனதனவானடுத்தவரைத்தாணுக்குமியல்பின்மிக்கான்
பேர்பூத்தசோணாட்டுவேளாளர்குலதிலகன்பிறங்குசீர்த்தித்
தார்பூத்தசைவசிகாமணிசுகுணசிதம்பரமாறவத்தில்வந்தோன். (க)

மாமேவுபல்கலையுநுண்ணறிவிற்கற்றுணர்ந்தவாய்மைதேர்ந்து
பூமேவுமன்னவர்தங்கண்மணியாயதிகாரப்பொலிவின்மேவித்
தேமேவுகண்ணோட்டமுதற்பலநற்குணத்தாலுஞ்சிறந்துவாழ்வோ
னேமேவுமந்திரமென்றோதுசரவணபவப்பேருற்றவள்ளல். (உ)

அகமேறுமணிப்புரிசையரணேறுசிராப்பளியினகத்துமோவா
விகமேறுமெனதிதயத்தகத்துமென்றுமிடையறாதுறைவோன்மெய்மைப்
புகமேறுநயவிபுலன்பொறையேறுமிருங்குணத்தோன்புவனிமீது
திகமேறுமீனாட்சிசுந்தரநாவலரோதுசிந்தையோர்ந்து. (ங)

துன்னியபாவலர்களிப்பவியற்றுதிருமயிலாடுதுறைப்புராண
மன்னியமான்மியமுமதன்சொற்சிறப்பும்பொருட்சிறப்பும்வயங்கத்தேர்ந்து
மின்னியபேரருள்வள்ளல்சந்நிதியிலியாவர்களும்விரும்பமேவி
நன்னியமந்தலையெடுப்பவரங்கேற்றுவித்தளவாநலம்பெற்றானே. (ச)

## சிறப்புப்பாயிரம்.

இப்புராணஞ்செய்யுங்காலே

யுபசரித்தவர்மேல்

சென்னைப்ப்ரீசர்மிஷன்பாடசாலைத்தமிழ்ப்பண்டிதர்

# தெய்வசிகாமணிமுதலியார்

இயற்றியது.

கலிவிருத்தம்.

சேதனவாழ்க்கையர்கள்செறிதிகழ்மாயூரத்தமர்வான்
கோதமையவொண்ணுதகூடலுடைக்கோத்திரத்தான்
மாதயவான்கோவிந்தவள்ளறவத்தினிலுதித்த
மேதகையமிகுகுணத்தான்வேங்கடாசலமகிபன். (க)

நல்லகுணவிபவத்தோனல்லநெறிவழுவாதோன்
பல்லநூலொருங்குணர்ந்தோன்பல்லநூலொருங்கியற்றும்
வல்லனெனவல்லோர்வயங்குறவோர்ந்தினியனெனச்
சொல்லவருமீனாட்சிசுந்தரநாவல்லோனே. (உ)

ஆயசீர்மயிலாடுதுறைப்பெருமான்மான்மியமாம்
பாயபாயிரமாதிநைமிசத்துப்பண்ணவர்வந்
தேயபூசனைபுரிதலீறாகப்பாடளவு
நேயமுடனுபசரித்துநிரம்புபுகழ்பெற்றனனே. (௩)

சிவமயம்.

## சிறப்புப்பாயிரம்.

இப்புராணம்பதிப்பித்தவர்மேல்

கும்பகோணம் புரோவின்சியால்கல்லீஜ் தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்

# தியாகராசசெட்டியார்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பொன்பூத்தமயிலாடுதுறையெனுமாயூரநகர்ப்பொலிந்துவாழ்வோன்
கொன்பூத்தவளவரங்கக்குடிவாழ்க்கைப்பூவனுடைக்கோத்திரத்தான்
மன்பூத்தகார்காத்தார்குலதிலகன்முருகப்பவள்ளன்மைந்தன்
றென்பூத்தகல்வியறிவொழுக்கநயகுணங்கூடித்திரண்டாற்போல்வான். (க)

ஆயபுகழ்வேளாளனெனப்புகலுங்காரணப்பேரருத்தந்தேர்ந்து
பாயபுவியிடைப்பலர்க்குமொப்புரவாதிகளினியபண்பினூற்றுந்
தூயவன்பல்கலைகளுங்கற்றுணர்ந்தவரோடளவளாந்துணிபேமேற்கொ
ணேயமுடையவன்கல்விநயந்தெரிவிற்பனவிநயநிரம்பப்பெற்றோன். (உ)

ஓங்குசிவனடியாரையவனெனக்கண்டுபசரிக்குமுண்மையாளன்
தேங்குசிவாலயங்கடொறுஞ்சென்றுசென்றுதொழும்விருப்பச்சிந்தையாளன்
பாங்குபெறவிருந்தின்றியுண்டபகல்பயன்செய்யாப்பகலென்றோர்வான்
வீங்குபுகழ்மேயவயித்தியலிங்கமாலெனும்பேர்மேயநல்லோன். (ங)

முன்னுளபல்புலவருளும்பின்னுளபல்புலவருளுமுதியீர்செஞ்சொன்
மன்னுபன்னூலொன்றோடொன்றுதோலாதுமாண்புபெறவகுப்போர்யாரோ
யென்னிலெவர்தமைக்குறிப்பேமிணையனேயெனக்குறிப்பவிசைமைவாய்ந்து
துன்னுநயகுணமேலோன்மீனாட்சிசுந்தரநாவலவரோதே. (ச)

மன்னுமயிலாடுதுறைப்புராணம்பாடும்பொழுதுமருங்குமேவி
மின்னுசிறப்புறமுயன்றதன்றியுநித்தியகருமவிதிகள்யாவுந்
துன்னுமதிற்பொருந்துவிதம்பாடுவித்தொண்சிறப்பனைத்துந்துணிபினோர்ந்து
புன்னுமதுபரவவொன்றையாயிரஞ்செய்தளவாதபயன்பெற்றானே. (ரு)

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மாயூரப்புராணம்.

## கடவுள்வாழ்த்து.

### அகத்தியவிநாயகக்கடவுள்.

* பூமேவுதன்னடியார்தமைவிளக்கிமுந்திருக்கைபுணர்த்தல்வல்ல
தேமேவுபெருங்கருணையாளனெனநெறிப்பமன்றத்திருநாமங்கள்
பாமேவுபலவிருக்கவகத்தியமால்களிறெனும்பேர்பரித்தநாளு
மாமேவுமயிலாடுதுறைத்தளிவாழ்பெருமானைவணக்கஞ்செய்வாம். (க)

### பெரியவிநாயகக்கடவுள்.

* மன்னியபேருருவாய்ந்தமதாசலமாமுடிமேக்குமருத *நாமே
துன்னியபேருருவாய்ந்தபூதத்தினடிகிழக்குந்தோய்தற்கேற்ப
மின்னியபேருருவாய்ந்துபெரியவாரணமெனும்பேர்விளங்கப்பூண்டு
பன்னியபேருருவாய்ந்தமாமயிலைத்தளியமரும்பரன்முள்போற்றி. (உ)

### வதானியீசர்.

சீர்பூத்தவிமையாரும் * அமையாருந்தோட்சசிசேர்செல்வவேந்தும்
பார்பூத்ததிருவானும்பெருவானும்புகழ்புரவுபண்ணுவானுங்
கூர்பூத்தவேனோருந்தேனோருமலர் * இறைப்பக்குறித்தநல்கி
யோர்பூத்தமயிலாடுதுறையமரும்வள்ளலாரிருதாள்போற்றி. (ங)

### சூதவனேசர்.

இச்சையறிவுறுதொழிலாய்ப்பரையாதியாதியாயெண்ணிலாத
விச்சைசெயாரணிமுதலாய்ச்சத்திவிந்துவாதியாய்வேருயின்னு
மச்சையினிதோம்பிடுவானளவாதகருணையிற்பல்லண்டமீனும்
பச்சைமயில்போற்றெடுக்கமாவடிவீற்றிருப்பாலாப்பரவிவாழ்வாம். (ச)

### அபயப்பிரதாம்பிகை.

பரவுபிறரபயவரதம்புனைந்தும்பாவனையாம்படியாணை
வுரவுமிகுமவைமலர்க்கையமைத்தமைத்தபடியகிலவுயிர்க்குமாற்றிக்
கரவுதவிர்தரவனையவுபயமேதிருப்பெயராய்க்கதிர்ப்பப்பூணுற்
றரவுமதிபுனைவார்பாலமரஞ்சனயகிதாளடைந்துவாழ்வாம். (ரு)

---

* அடியவரைவிளக்கஞ்செய்து தேவர்முதலியயாவரினுமுந்தி யிருப்பச்செய் தல்தோன்ற, விநாயகக்கடவுள் திருநாமம் பலவிருக்கவும், தமது திருப்பெயர் முன், அடியார்பெயர்கொண்டானென்பதுகருத்து.

* முடியும், அடியும், யானையும் பூதமுமாகிய பேருருவங் கோடலால், அதற்கேற்பப் பெரிய விநாயக னெனத்திருப்பெயர்பூண்டு, அத்திருவுருவிற் கேற்பப் பெரிய கோயிலி லெழுந்தருளினனென்பது கருத்து.

* நாம் அச்சம் "பேநாமுரு மெனவருஉங்கிளவி, ஆமுறைமூன்று மச்சப் பொருள" தொல்காப்பியம் உரியியல், சகூ. சூத்திரத்தானுணர்க,

* அமை, மூங்கில்.

* தேனோருமலர் வண்டாராயுமலர்.

## இ து வ ம ந.

பரந்தமலர்க்கருங்குழலுஞ்செவ்வாயும்வெண்ணகையும்பசுவேய்த்தோளுஞ்
சுரந்தவருள்பொழியுமிருவிழியுமெழில்வழிமுகமுந்துணைப்பொற்றேடுங்
கரந்திருவிடையுமொண்செம்பட்டுடையுமங்கலப்பொற்கழுத்துநாளு
மிரந்தவருக்கருளஞ்சலுயகினூபுரப்பதமுமிறைஞ்சிவாழ்வாம். (சு)

## ம யி ல ம் மை ம.

வாவிபொலிபிரமவனமாயூரமெனுமொருபேர்மருவியோங்கத்
தூவியனமுணராதமுடிச்சரபமொருமயிலாத்தோன்றியாங்கு
மேவியமர்தருவிடபமரங்கமாநடம்புரியவிழைந்துநோக்கி
யோவியெலாம்* முனமகிழ்பூத்தமர்ந்துதொழும்பசுமயிலையுன்னிவாழ்வாம்.(எ)

## ச பா நா ய க ர்.

மாடுவானகைநோக்கநாடுவானவர்பலரும்வணங்கிவாழ்த்த
வூடுவான்பொழிவதெனப்பாடுவான்புலவர்துதியுளைப்பயாமு
நீடுவான்முதலியவையோடு* வான்வளிபொருவல்* நீத்தானந்தங்
கூடுவானம்பலத்துளாடுவான்குஞ்சிதத்தாள்குறித்துவாழ்வாம். (அ)

## சி வ கா மி ய ம் மை ம.

காமுன்றுமடியிரண்டுஞ்சிருட்டிமுதலைந்தொழிலுங்கதிப்பவாற்றச்
சிரமூன்றுநான்குமுளார்சேவிப்பவெண்முறுவல்செவ்வாய்த்தோற்றிப்
புரமூன்றுமெரித்தார்செய்நடங்காண்டல் *அறுவலிக்கப்போதல்* ஆய
திரமூன்றுமிரண்டனுக்கும்வினைமுதலாம்பராபரைதாள்சேர்ந்துவாழ்வாம். (கூ)

## தட்சணாமூர்த்திக்கடவுள்.

மான்மலரவன்முன்னோர்தொன்முதலெனவமுத்தற்கேற்பச்
சூன்மலர்கருணையாலோர்தொன்முதல் * அமர்ந்தான்மாக்கள்
கான்மலரடங்குமுண்மைகைமலர்க்காட்சியாலே
தான்மலர்தரத்தெரிக்குந்தம்பிரான்சரணஞ்சார்வாம். (ய)

## வயிரவக்கடவுள்.

ஓங்குசொற்படைமுன்னஞ்சுமொள்ளுகிர்ப்படையுந்தேசு
வீங்குசக்கரமுன்னனவெம்படையஞ்சுமஞ்சுந்
தாங்குசூற்படையுங்கொண்டோர்தலைக்கலநெய்த்தோரோற்ற
பாங்குசேர்வடுகப்புத்தேள்பதமலர்க்கன்புசெய்வாம். (கக)

---

* முனமகிழ், மயிலுருவங் கொள்ளாமைக்கு முன்னமே திருநடனங்கண்டமகிழ்ச்சி.

* வான்முதலியவை, ஆகாயமுதலியதத்துவம் ௩௬.

* வான்வளிபொருவல், ஆகாயமுங்காற்றும்போலத் தத்துவங்களோடு, அபேதமாவிருக்கை.

* அறு, காண்டலைக்குறித்த குறிப்பு வினைமுற்றுப்பெயர்.

* வலிக்கப்போதல், காட்டல்.

* தொன்முதல், ஆலடி.

## அகத்தியவிநாயகக்கடவுள்.

உயர்திணையுமஃறிணையுமாயவொருதிருவுருவமுற்றுமேவும்
பெயர்வில்கருணைக்கிணங்கவவ்விரண்டுதிணையுயிரும்பேணித்தாங்க
லயர்வுலகந்தெரிப்பவிளமதியுமுதுவரவுமுடியலங்கத்தாங்கி
மயர்வுதபவீற்றிருக்குமகத்தியவாரணத்தடிகள்வணக்கஞ்செய்வாம். (௧௨)

## குமாரக்கடவுள்.

நெடுவரைவிற்பவளவொளிபடுவரையைக்கூறுசெய்துநிலவுமண்டத் - தொடுவ
ரைவிலுயிர்க்குமுடன்முதலியதன்கூறுசெயுமொருவேல்கொண்டோர்- கொடுவ
ரையைக்கூறுசெய்துகடன்மாவுங்கூறுசெய்துகொடும்பக்கஞ்சார்ந் - தடுவரை
யிற்பொலிமயின்மேற்பொலிதருசேவகன்மலர்த்தாளடுத்துவாழ்வாம். (௧௩)

## நந்திதேவர்.

வண்ணம்பொலியுமேருமால்வரையைமேவுநகையினர்சேர்
விண்ணம்பொலியுமிளாவிரதமேவலெனமான்மறியினொடு
தண்ணம்பொலியுங்கைப்பரமற்சாரும்விருப்பரறிவுடையோ
ரெண்ணம்பொலியுந்தனைச்சாரவிருக்குமொருவன்பதம்பணிவாம், (௧௪)

## இடபதீர்த்தம்.

நதிநதமுநதிபதியு * நபப்புனலுமற்றுமுளநாரம்யாவுந்
துதிகெழுவப்படிந்தாடித்தாமீட்டும்பாவமெலாந்தொலைத்துப்போயுங்
கதியருணின்மலமாகியுயிரோம்புகவேரனருள்கன்னித்தீர்த்த
மதிசெய்துலாத்தீர்த்தமெனுமிடபதீர்த்தத்தினையாம்வணக்கஞ்செய்வாம். (௧௫)

## தமிழாசிரியர்.

மயிலைநிகரஞ்சாயன்மங்கையொடுமருள்பரப்பிவானோர்சூழக்
கயிலையமர்பெருமானினுலோபாமுத்திரையெனும்பேர்க்கற்புவாய்ந்த
குயிலையடுமொழியொடுஞ்செந்தமிழ்பரப்பிமுனிவர்குழாங்குலவிச்சூழ
வெயிலைவிடுமணிப்பொதியத்தமருமொருமுனிவரன்றாண்மேவிவாழ்வாம். (௧௬)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

தமரொடுவெள்ளநீந்தத்தவமுயன்றெழுநாளாற்றி
யமர்கொடுங்கணையொன்றுய்த்துவருந்துமாலவன்போலாது
தமரொடுவெள்ளநீந்தநாவாய்க்கட்டவிழ்த்துத்தாவா
தமரொருபதிகஞ்செவ்வாய்மலர்ந்தவர்க்கடிமைசெய்வாம். (௧௭)

## திருநாவுக்கரசுநாயனார்.

பெறுமணிநிறத்தமைத்தும்பிறங்குபொன்னுடம்பிற்போர்த்து
முறுபெருங்காவல்பூண்டோர்ந்துறங்குமாயவன்போலாது
பெறுமணிபொன்னெலாங்கைப்பேருழவாரத்தாற்சோ
வுறுபுறம்விட்டானந்தவுறக்கஞ்செய்பவர்தாளுள்வாம். (௧௮)

## சுந்தரமூர்த்திநாயனார்.

எண்ணிமாலயன்முன்னோர்குற்றேவல்செய்பெரும்பேறென்று
நண்ணிநாமுய்வோமென்றுநாளுங்காத்திருக்கவுள்ள
புண்ணியமுதல்வன்றானேபோந்துகுற்றேவல்செய்ய
வண்ணியதோழமைப்பாலமைந்தவர்க்கன்புசெய்வாம். (௧௯)

---

* நபப்புனல் - ஆகாயகங்கை,

### மாணிக்கவாசகசுவாமிகள்.

பரமனைப்புறந்தழீஇமுன்பாற்சுவடுறுத்தாள்போலா
ஆரவகந்தழீஇயன்னான்மன்சுமந்துழன்றடியொன்றேற்றுக்
கரவின்மேல்கிழ்பின்னென்னக்கறைதருமொருமுப்பாலுந்
திரமுறுசுவடுகொண்மார்திகழ்ந்தவர்க்கன்புசெய்வாம். (௨0)

### தண்டீசநாயனார்.

பாதகவரக்கற்கொன்றுபடுபழியலைக்கப்பட்டு
நோதகவடைந்துதீர்ந்தநோன்சிலையிராமனுனை
மேதகவந்தனுளனுருயிர்வீயமாய்த்து
மாதகவமையுமுத்திமருவினார்சரணஞ்சார்வாம். (௨௧)

### அறுபத்துமூன்றுநாயன்மார்.

தகைபெறுமுண்மைவாய்ந்ததஞ்சரித்திரமேயாய
தொகைவகைவிரியோர்மூன்றுந்தொழுபெரியோர்க்குச்சொற்ற
பகைதவிர்குரவனாவான்படர்சடைப்பிரானேயாக
நகைசொலுமறுபான்மூவர்நறுமலர்ப்பாதம்போற்றி. (௨௨)

### பஞ்சாக்கரதேசிகர்.

வினையொடுமிருளனாதிமேவியசெயலைநீக்கி
யனையினுமுயிர்க்குநல்கியாவடுதுறைக்கண்மேய
தனைநிகர்நமச்சிவாயகுருபரன்சரணஞ்சார்ந்தார்
புனைமலரடியென்சென்னிக்கணியெனப்பொலியுமன்றே. (௨௩)

### குருவணக்கம்.

வடுவகிர்க்கண்ணாராசைவலைப்படார்செறிகோமுத்தித்
தொடுகடலுலகமேத்துஞ்சுப்பிரமணியதேவ
னொடுகலந்தமராநிற்குமொருவனம்பலவாணப்பேர்
கொடுவருசிவனென்னெஞ்சங்கொண்டனன்குறிப்பதெங்கே. (௨௪)

### மற்றையடியார்கள்.

மன்னியமாமயிலாடுதுறைத்தளியுள்வள்ளலார்வயங்குசீர்த்தி
பன்னியநாவுடையரகம்படித்தொண்டினெறிநிற்போர்பாவுநீறுந்
துன்னியகண்மணித்தொடையுமைந்தெழுத்தும்பொருளாகத்துணிந்தோராய
முன்னியவிந்நியமரெவராயினுமற்றவர்சரணமுடிக்கொள்வாமே. (௨௫)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

---

## அவையடக்கம்.

---

தண்ணியநீராவடுதண்டுறைநமச்சிவாயகுருசாமிபொற்று
எண்ணியசிந்தையன்கௌரிமாயூரப்பெருமான்கட்டளைமேற்கொண்டு
புண்ணியமேன்மேலுயரவளர்ப்பவனற்குணசீலன்பொறையிற்கூர்ந்தோன்
மண்ணியமாமணிமுத்துக்குமாரமுனிவரனருட்கோர்வைப்பாயுள்ளான். (௧)

வடமொழியிருந்ததெய்வமாயூரமான்மியத்தைத்
திடமொழிபெயர்த்தெடுத்துச்செந்தமிழ்மொழியாலின்பம்
படமொழியென்னவன்னூன்பணித்தசொன்மறுத்தற்கஞ்சித்
தடமொழிப்புலவர்முன்புசாற்றிடத்துணிந்தேன்மன்னோ. (௨)

நன்மொழியமைந்தசான்றோர்கூடுமந்நகருள்யானென
புன்மொழிகொண்டுசேறல்புவனங்களொடுத்துப்பேசும்
வன்மொழியமைந்தசாதிமலர்பயிலிடத்துநன்மை
யன்மொழியொருவனெல்லாவருக்கங்கொண்டணைதல்போலும். (௩)

தண்ணியவிமயப்பச்சைமயில்செய்பூசனைதழீஇய
புண்ணியமுதல்வன்காகபூசையுந்தழீஇயவாற்றா
லெண்ணியபெரியோர்செய்யுமினியபாவேற்றலோடு
கண்ணியஞானமில்லேன்பாடலுங்கைக்கொள்வானால். (௪)

இலைமலர்தாங்கப்பட்டவிருவருமிறைஞ்சும்வெள்ளி
மலையவன்பெருமைக்கேற்றபாக்கொளின்வாய்ப்பாட்டென்னிற்
புலைமுடைத்தோலும்பாம்பும்புனறலைத்தொடையுமென்பு
மலைவின்மற்றனையாற்கேற்றவாடைபூணுமோசொல்லீர். (௫)

நன்மொழியியலுணர்ந்தோர்நாயினேன்புகன்றபாடல்
* அன்மொழியாவதேனும் * அல்வழியாவதேனும்
புன்மொழிப் * போலியேனும்வேற்றுமைபொருந்திற்றேனும்
வன்மொழிபுகன்றுதள்ளலாவதோர்வழக்குமுண்டோ. (௬)

பரசிவபுராணமென்னும்பத்திசற்றேனுமில்லார்
விரவுவகுற்றமென்றுவிளம்புவரெவர்சொற்றாலு
மரவணியனையானிந்தையறையவுந்துணியுமந்தக்
கரவரென்கவிக்குக்குற்றங்கழறலோரிறும்பூதன்றே. (௭)

வாரியுட்கலந்தபுன்னீர்வாரிதிநீரேயாகுஞ்
சீரியபயங்கலந்ததீர்த்தமும்பாலேயாகும்
வேரியங்கடுக்கையண்ணன்மான்மியம்விரவாநின்ற
பூரியனுமென்சொல்லும்புனிதமாய்ப்பொலியுமன்றே. (௮)

ஒடுங்கலில்குரவனாகியுண்மைபோதிக்குமம்மா
னெடுங்கணக்குணராரொல்லாநிகழ்தருகுரவரென்றோர்
படும்பெயர்பூண்டுமண்மேற்பயிலவும்வெறுத்திலான்கை
விடுந்திறமுணராரென்சொன்மேலவரானார்நாளும். (௯)

அவையடக்கம் முற்றிற்று.

## சிறப்புப்பாயிரம்.

துன்னுதிரைக்கருங்கடல்சூழ்புவிபுகழுமயிலாடுதுறைப்புராணம்
பன்னுவடமொழிநின்றுமொழிபெயர்த்துத்தென்மொழியிற்பாடித்தந்தா
னுன்னுசிவஞானகலைமுதலாயபல்கலையுமொருங்குதேர்ந்தோன்
மன்னுதிரிசிரபுரம்வாழ்மீனாட்சிசுந்தரநாவலவரேறே. (௧)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௩௫

---

* அன்மொழி-தீயமொழி, * அல்வழி-தீயவழி, * போலி-உட்பொருளின்மை.

# திருநாட்டுப்படலம்.

---

ஆரவுவார்சடையெம்வள்ளலாருயிர்ப்பொருட்டுவாசக்
குரவுவார்கூந்தற்செவ்வாய்க்கோற்றொடியோடும்வைகும்
பரவுவார்மயிலைமுன்னாப்பஃறலந்தன்னுட்கொண்டு
விரவுவார்சோழநாட்டின்வளஞ்சிலவிளம்பலுற்றாம். (க)

பூவினுட்பதுமம்போலும்புருடருட்டிருமால்போலுங்
காவினுட்கற்பம்போலுங்கலைகளுண்ஞானம்போலு
மாவினுட்சுராரான்போலுமறத்துளில்லறமேபோலு
நாவினுண்மெய்ந்நாப்போலுநாட்டினுட்சோழநாடு. (உ)

மேக்குநீர்கிழக்குநீரொன்றனாயிருநீருமேன்மே
லாக்குவாய்ப்புடையதாயவிலங்கலுமதனினின்று
தாக்குமாவாராநின்றதண்ணீரும்வடிவுதீர்த
னீக்குமாநகருமென்றுநிரம்பவுள்ளதுசோணாடு. (ந)

குன்றலில்விளைவுசெய்யுங்குடிகளுந்துறவுபூண்ட
நன்றறிபவருமந்தணாளர்முன்னாயினோருந்
துன்றவன்கலத்திற்பண்டிகளிற்பொருடொகுக்கும்வாழக்கை
யன்றலிலாருஞ்சேரவமைந்ததுவளவநாடு. (ச)

பெரும்பொருளுடைமையாலேயாவரும்பெட்பதாகி
யரும்புமோர்கேடுமின்றியாற்றவும்விளைவதாகி
வரும்பொறையனைத்துந்தாங்கிமன்னவற்கிறையுமுன்போற்
றரும்புகழுடையதம்மாதவாப்புகழ்ச்சென்னிநாடு. (ரு)

மயின்முதலுருவந்தாங்கிமலைமகளாயவன்னை
பயிலவும் * மந்திரங்கள்பல்லகொண்டேழியோங்குங்
கயிலையெம்பெருமான்மேவிக்கலப்பவுந்தவஞ்செய்தன்றா
லெயில்வளைநகரமெங்குமியைதருமபயநாடு. (சா)

நோக்கியவிடங்களெல்லாநுவலருந்தலங்களாகத்
தேக்கியதீர்த்தமாகச்சிவலிங்கமூர்த்தியாக
வாக்கியதவத்தானுமடைந்தவர்க்கறமென்றோதும்
பாக்கியமாக்கிமேலுய்ப்பதுமுதுசென்னிநாடு. (எ)

மறைநெறிதிறம்புவாரையாகமமறவியாரை
முறைதபவொழுகுவாரைமொய்ப்பழிப்பொருள்வேட்பாரைக்
குறையறவிருந்தோம்பாரைக்குறித்தனகொடாரைமுங்க
ணிறையடிபூசியாரையில்லதுகிள்ளிநாடு. (அ)

திருமிகப்பெருகலாலேதீயவெம்பசியுங்காலப்
பருவரலின்மையாலேபாறுறுநோயுமன்னற்
கொருவரும்படையினாலேயுடற்றுவெம்பகையுமில்ல
திருநிலம்புகழநாளுமியைந்தசெம்பியர்தநாடு. (கூ)

---

* மந்திரம் - கோயில்.

தலையமைசென்னிநாடுதவாவகளங்கநா டு
நிலைபெறுமபயநாடுசிரம்பியவளவநா டு
தொலைவிலாப்பெருசீர்நாடென்றின்னமுஞ்சொல்லப்பெற்று
மலைவிலாப்பயன்செய்நாடுமற்றிதுபோலொன்றுண்டோ. (ய)

வேறு.

பொங்குவெண்டிரைக்கங்கைமேற்படர்ந்ததுபோலத்
தங்குவெண்முகில்வான்வழிப்படர்ந்திறைச்சயிலம் *
* முங்குதண்கடற்புனல்கொளீஇக்கருநிறமுற்றி
யங்குநின்றுகாளிந்திபோந்தென்னவானணைந்த. (கக)

வாரியஃகுமாமால்குடித்தெழுதிறமதிக்கின்
வேரியந்தொடைத்தம்மிறையாகியவேந்தன்
மூரிவெம்பகைவரையமரிடங்கண்டுமுற்றிச்
சோரிசிந்திடப்பறையரிவான்செயறுணையும். (கஉ)

விதிக்குமாற்றல்செய் * கருமுகில்வானளாய்மின்ன
றுதிக்குமங்கதிர்காளிந்தியெனுமொருதோகை
மதிக்குமேனியிற்பொற்பணிபுனையமற்றவைதாங்
கதிக்குமாறவண்மெய்நின்றுமின்னுதல்கடுக்கும். (கங)

முற்றுசூற்பெருங்கொண்டல்கள்வானின்றுமுழங்க
லெற்றுதெண்டிரைநதிகளின்விளக்கமிக்கியைத
லுற்றுலாங்கதிர்ப்பால்வருதன்சிறப்புன்னி
மற்றுமேற்படர்காளிந்திமுழங்குதன்மானும். (கச)

மீதுமூடியபயோதரம்வேனில்வெப்பழிய
மோதுவாமெனமுனிதரல்கூற்றெடும்பிறந்த
மாதுமாநதியாதலிற்காளிந்திமாறுத்
தீதுநோக்குபுதண்டிக்கமுயல்வதுசிவணும். (கரு)

கருநிறங்கொள்காளிந்தியோர்பாதியிற்கலப்பப்
பொருவில்குங்குமம்பூசிடப்பொலிதருநுதல்போல்
வெருவில்வானகமெங்கணுமூடியமேக
மொருவில்வாங்கியதுறுகடுங்கோடைபோயொளிப்ப. (கசு)

உள்ளமாநதிபல்லவுமுறுபெருவெப்பங்
கொள்ளவேனில்செய்கொடுமையுட்குறித்தகாளிந்தி
மெள்ளமெய்வெயர்த்திடவெயர்நிலத்துவீழ்ந்தென்னத்
தள்ளரும்பலவுறைசிதறினசலதரமே. (கஎ)

வெப்பு நாய்செயும்வேனிலைவீட்டுவனென்று
பப்புகா ந்திபல்வழிக்கொண்டுபாரிறங்கு
மப்பெரு றமெனவள்ளலாருளென்னச்
செப்பருஞ்சலதரம்பொழிந்தனசெழுமழையே. (கஅ)

---

* இறைச்சலம் - சிறையையுடையமலை.
* முங்கு மூழ்கற்பொருளுணர்த்துமுதனிலைத்தொழிற்பெயர்.
* விதிக்குமாற்றல்செய் - பிரமனுக்குஞ் சிருட்டிவலிகுறையும்.

மலைகளெங்கணும்பொழிந்தனமரஞ்செறிகான
நிலைகளெங்கணும்பொழிந்தனநிரம்புகாலோடைத்
தலைகளெங்கணும்பொழிந்தனதாழையங்கழிசூ
முலைகளெங்கணும்பொழிந்தனவள்ளியரருள்போல். (கக)

செய்யகோல்வலியரசுசிர்த்தெழுதருகாலை
வெய்யகோலுடைக்குறும்புமாய்ந்தொடுங்குறுவிதம்போற்
பொய்யுறுமுகில்பொழிந்தநீர்பரவுறுகாலை
யெய்யுறுவிளைத்தொடுங்கினவேனில்வெப்பெங்கும். (உ0)

கொண்டலாகியகவுணியகுலத்திளங்கன்று
கண்டல்சேர்புனற்கடலெனுங்கௌரிதன்முலைப்பா
லுண்டல்செய்தரும்பாமழைபொழிதலாலொழிந்த
மண்டல்கொண்டதீவேனில்வெப்பெனும்பரமதமே. (உக)

வரைநிரம்பினவருவிகான்யாறுபன்மரஞ்சார்
தரைநிரம்பினவோடைகாலேரிகடவாச்செய்
நிரைநிரம்பினநெய்தலங்கைதைசூழ்வேலித்
திரைநிரம்பினசிறுமணற்கேணிமிக்கூறி. (உஉ)

தரையடங்கலுமழைபொழிவெள்ளநீர்தவழ
வுரைசிறந்தலபம்புற்களங்குரித்தனவொருங்கு
விரைநறுங்குழன்மண்மகள்வெப்புநோய்தீர்ந்து
புரைசெய்பைம்படாங்குளிர்தபப்போர்த்ததுபொருவும். (உங)

விண்டபல்கமர்வெள்ளநீர்புகுதரவொன்றிக்
கண்டதேமெலாமேல்வழிந்தோடுமாகாணுங்
கொண்டனீர்தரைக்கேயன்றிப்பாதலங்குறித்து
மண்டனிதியன்றென்றுபோக்கறுப்பதுமான. (உச)

கொடிமரங்கண்முற்பல்லுயிர்களுநிலைகூட
முடிவிலாமுகில்பொழிதருபுவனமாழ்முந்நீர்ப்
படியடங்கலும்போர்த்தமைநோக்கியப்படிக்கோ
ரொடிவில்வான்பெயர்புவனமென்றுரைத்தனருரவோர். (உரு)

## குறிஞ்சி.

நலம்விராவியபொன்னிசூழ்சோழநன்னாட்டுப்
பலம்விராவியமழைவளம்யாவரோபகர்வார்
குலம்விராவியவைந்திணைவளத்துளுங்குறித்த
புலம்விராவியகுறிஞ்சியின்வளமுதற்புகல்வாம். (உசு)

ஈன்றதந்தைவாழிருக்கையினினமெனல்குறித்தோ
சான்றவன்னையைத்தந்ததன்குலமெனநேர்ந்தோ
வான்றகாதலியுயிர்த்தவரிடமெனலறிந்தோ
தோன்றமந்திரங்கொண்டுறும்வேள்வரைதோறும். (உஎ)

கோலவள்ளியாரொடுகுகனமர்தருகுணத்தா
லீலமாமயிலாவயினமருவநீங்கா
சாலமற்றவைதழைவிரித்தாடுமாருங்கு
மேலமைந்தவிண்வேந்தனூர்கருமுகில்விரவும். (உஅ)

எங்கள்சா[illegible]யிலொன்[illegible]முன்வள[illegible]
திங்கள்வ[illegible]தப்பி[illegible]செல்வன்
றுங்கமாரிடத்துகன்[illegible]மென்[illegible]தாங்குப்
பொங்குமும்மதம்பொழிபுவாப்[illegible]பொலிவ. (௨௯)

மறையினந்தமுந்தொடொனுன்மருகனும்மருவு
முறைநெரிந்துபசரித்தல்போன்முழுவலிவேட
ரிறைகொள்சந்தகில்விறையெழும்படியெரியிடுவார்
நிறையுணுக்கொளநெடுங்குரற்செந்தினைவிளைப்பார். (௩0)

அறவனுகியகுமரவேட்காட்டவுமினிய
நறவமேனலினிடியொடுகூட்டுபுநயந்து
குறவருட்டவுங்குறித்துநாடோறுமுய்த்திட்டும்
புறவமுற்பலவிடமெலாம்போய்ப்புகூஉவருமீ. (௩௧)

ஒருமடங்கலுமொருமதமலையுமுன்னுடன்று
பொருதழிந்தனவழிபடிற்பொலிவுளதென்றே
யிருநிலம்புகழ்குறிஞ்சிவேலிறைவன்மந்திரத்தை
மருவுநண்பொடுசூழுவமடங்கலுங்களிறும். (௩௨)

ஊடுமாதர்பாலாங்குறைந்துன்னுவார்வினையைச்
சாடுமண்ணல்பாற்சூழ்தலல்லாற்பிறதாழார்
நீடுவேங்கையோடமர்புரிதிறத்தினுனிறத்திற்
கூடுபல்வடுவன்றியோர்வடுவிலார்குறவர். (௩௩)

ஊரும்வான்மதிகாந்தளைப்பாந்தளென்றுன்னிப்
பேருமாலொருசாரொளிபிறங்குசெம்மணியைச்
சாருந்தீயெனவுளியமோடுறுமொருசார்மெய்
தேருந்தன்மைவாராவிடிற்செறிவனபலவே. (௩௪)

நீலமாமணித்துறுகல்மேழ்ப்படிதரிலவு
கோலமாமதிமேலுறநடுவிராக்குலவிச்
சாலமேலுயர்சோதியந்தருநிற்றலிருவர்
மாலவானுரீஇச்சிவபிரானின்றதுமானும். (௩௫)

சுனையிரும்பினுலிறவுளர்தொடுவதுகவலை
புனையிலாதவர்விளைத்தலும்போக்கரும் * கவலை
வனையின்மற்றவர்படுதலும் * மாதரங்கவலை
கனையிலாவவர்க்கென்றுமில்லாததுங்கவலை. (௩௬)

குன்றவாணர்தங்குறிச்சிசூழ்வேலியுஞ்சென்னி
யொன்றவைத்திடும்ணையுமற்றவர்தமொள்ளிழையார்
நன்றவாவுகையுலக்கையுநகுதலைச்சீப்பு
மன்றநாடொறுமாவனயானைவெண்மருப்பே. (௩௭)

பொங்குசெம்மணிவிலங்கலுமரகதப்பொருப்புந்
தங்குகற்குடிச்சைலமுமுலகெலாந்தழைய
வெங்கும்வாள்விடுமுத்தலையிரும்பெயர்க்கிரியு
நங்குதீறொறும்போங்கலுநயந்ததுகுறிஞ்சி. (௩௮)

---

* கவலை, தினை. * மாதரக்கவலை, பெண்களது கண்ணுதி யவலை.

அரவுபூண்டகம்பிரானமர்சுந்தரப்பொருப்புங்
குரவுபூண்டொருகுமரவேள்பொலிதருகுன்றும்
பரவுமற்றவுந்தன்னகம்பொலிதரப்படைத்த
வரவுசேர்பெருங்குறிஞ்சியினருந்தவமொன்றே. (ரு௯)

முல்லை.

விண்டுவாழுயர்தொழப்பொலிவெற்றிவேலிறையே
மண்டுதற்கிறையாக்குபுவாழுமொண்குறிஞ்சி
யண்டுபல்வளத்தெவனுரைத்தனமினியறைவாம்
வண்டுகிண்டுபன்முல்லைசூழ்நிலப்பெருவளமே. (௬0)

வேறு.

பாயபலபெரும்புவனப்பகுதிபொறுக்கடிங்தோம்பு
மாயன்மதித்திடுசிறப்புட்சிறப்பாகவனமோம்பிற்
றூயதிரைப்பாற்கடலோவைகுந்தத்தொல்பதமோ
வாயவனமிவைக்கதிகமாகுமெனில்வரும்பழியென். (௬௧)

வினாமலர்செற்றியதருங்கண்மிகச்செறியும்பெருவனத்தைத்
திரையெறிபாற்கடலென்றுசெப்புவதற்கையமில்லை
வரைவில்பசுங்கன்றூட்டிமடித்தலநின்றிழித்திடுபால்
புரையில்பெருக்கெடுத்தோங்கப்போற்றிமால்வசித்தலினல். (௬௨)

அண்டர்குழாம்பலருஞ்சூழ்வாய்காங்குமலர்காயாக்
கொண்டபெருஞ்சாரூபத்தவரமர்கோலந்தெரிக்க
வண்டடையுந்தண்டுழாய்மாயனினிதமர்தலினாற்
கண்டவனம்வைகுந்தமெனக்கரைதற்கையமெவன். (௬௩)

மழைமறுத்தகாலத்துங்காயாவாய்மல்குதலாற்
றழைமலர்செய்காயாவென்பெயர்பெற்றுத்ததையவற்றை
விழைதருபைந்துழாய்சூழ்வமேயமாறம்பாற்கொள்
குழையும்விழைவுணர்ந்தவைகள்குழாங்கொடுசூழ்ந்தமைமானும். (௬௪)

கொடியிடையாய்ச்சியர்திரட்டிக்கொண்டசுவைநவநீத
மொடிவறுதாழியினமுல்வைத்துருக்குமணங்கவர்வதற்கும்
படியிலவர்முறிமேனிபரப்புமணங்கவர்வதற்கு
நெடிவனம்பன்னுசிபடைநீர்மையெனக்குமிழ்மலரும். (௬௫)

திரையெறிபாற்கடனடுவேட்டிருத்துயில்கொண்மணிமார்பன்
புரையில்வனத்தாய்ச்சியரிற்றெருரும்புகுந்துபால்கவர்ந்து
விரைதரமத்தடியுண்டுங்கட்டுண்டும்விழைந்தமர்வா
னுரைசெயவர்கையளையவுறுசுவையாதலையுணர்ந்தே. (௬௬)

அழன்மிசையுற்றுறுபாறனளவுசுருங்கியுங்கரிய
குழலிடைமின்னாரின்சொற்கொவ்வாமைகுறித்தன்றே
நிழலுருவந்திரிந்தனையார்நிலாவளைக்கைமத்துடைக்கச்
சுழலடைந்தும் * அலர்கலந்துந்தோற்றமுறக்கதறிடுதல். (௬௭)

தொறுவியர்தங்குவட்டுமுலைத்துணைக்கொவ்வாமையினன்றே
வுறுசுவைகொள்பாற்குடங்களுடம்புமுழுவதுங்கறுக்கு
மறுவறுகற்புடையவர்தம்மருங்குலொவ்வாமையினன்றே
துறுதளவக்கொடியனைத்துந்தொலையாதவலர்படுமே. (௬௮)

---

* அலர் - நீர்,

திருமகளாகியவுழையைச்சேர்ந்தவிணைமென்றுழையும்
பொருவிலவனொடும்பிறந்தான்புடையமருமுயற்கினமென்
றொருவில்பலமுயற்குலமுமுரிமைகடைப்பிடித்தொழியா
வருமணிமார்புடைமாயோன்வீற்றிருக்குமாவயினே. (௪௧)

திங்கணுதற்றிருமகள்சேர்செல்வனினிதோம்பிடுங்கா
டங்கண்மலர்க்கடுக்கைதழைந்தமர்தலினலறுகுறலாற்
கொங்களவின்மலர்செறியுங்கூவிளங்கள்பொருந்துதலா
லெங்கள்பிரான்செஞ்சடைக்காடென்றுரைத்தற்கையமிலை. (௫0)

வெள்ளியகோத்திரவப்போர்மேலுயர்ந்துதோன்றுதலால்
வள்ளியரீன்மணிவண்ணமால்காக்கும்புறவவள
மொள்ளியமால்வரைகாணவொருங்கடைந்துநிற்றல்பொருஉந்
தெள்ளியபல்பயற்றேருங்கல்சிறுகுன்றச்செறிவொக்கும். (௫௧)

நீலமணிகண்டனமர்நெடுங்களமுகிரம்புதவச்
சீலமருவியமேலைத்திருக்காட்டுப்பள்ளியுமெய்க்
காலமூன்றுங்கங்கைகண்டசோழீச்சரமுஞ்
சாலவனத்தமைந்தவெனிற்றவஞ்சிறிதோபெரிதன்றே. (௫௨)

மன்னன்முதல்வானரொலாம்வந்துதொழவரங்கொடுத்து
முன்னவனெக்காலுமமர் * முற்கபுரமுதலாகப்
பன்னரும்பஃறலந்தன்பாற்பரம்பவுளதெனத்தெரிந்தா
லென்னருமுல்லையின்பெருமையெடுத்துரைக்கவல்லுநரோ. (௫௩)

அம்மையார்நீழலில்யாமமர்வோமென்றருள்செய்த
செம்மையார்வீற்றிருக்குந்திருத்தஞ்சைமுதலாக
வெம்மையாரருளுய்க்குமிறைவர்தலம்பலவென்னில்
வெம்மையார்பெருவனத்தைவிண்ணுலகுநிகர்க்குமோ. (௫௪)

### மருதம்.

குழக்கன்றுபின்றொடரக்குடஞ்சுட்டுப்பலபயில
மழக்கன்றுகுணில்கொண்டமால்காக்கும்வனம்புகழ்வா
னெழக்கன்றுநகையாற்சற்றியம்பினுமருதவளஞ்
சழக்கன்றுசிறிதுரைப்பாம்பெரிதுரைக்கத்தகாமையினால். (௫௫)

### வேறு.

பன்னரும்பெருமைவாய்ந்துபடர்தருவைந்தனிழன்
மின்னருநிதிமுன்னெல்லாம்பணிதலைமேவிநிற்ப
நன்னலவரம்பைமாதர்நடங்கண்டுவானங்காக்கு.
மன்னவன்காக்குமேன்மைவாய்ந்ததுமருதவேலி. (௫௬)

வரைதரவருதலானுமாமலர்தாங்கலானும்
புரையில்பல்பேதமாகிப்பலபெயர்பொருந்தலானுந்
தரையகமோம்பலானுந்தண்ணளிநீரினானும்
கரையறப்பெருகும்பொன்னிகடுக்குமெம்பிராட்டியாரை. (௫௭)

மலைபடுவயிரங்கொண்டுவருதலின்வானவேந்த
னிலைமலைமலர்மேலாகவிளைதலினெண்கணாளன்
றலைவளைசுமத்தலான்மால்கடுக்கைசார்ந்தணைதலாலே
கலைமறைபுகழுமெம்மான்கடுக்குநீரருதபொன்னி. (௫௮)

---

* முற்கபுரம் - பயறணியீசம், அது. உடையார்பாளையமென வழங்குகின்றது.

மணிமயிற்றழைமால்யானைமருப்பகினறுஞ்சந்தாதித்
துணியொளிர்சுவணநெய்பாறுதைமலர்கரும்புகந்தி
யணிகெழுசாலிபல்பூவலங்குநித்திலந்தப்பாதிக்
கணிதமிலுறலாற்பொன்னிகலந்தபண்டாரம்போலும். (௫௯)

இருகரைமுறியக்குத்தியெங்கணும்வெள்ளமாகிப்
பெருகிமுன்னெழுந்தகங்கைப்பெருக்குமோர்திவலையென்ன
வருகொருவருஞ்சாராமலலையெறிந்தகடுகிண்டு
கருகுபைங்கடல்கலக்குங்காமருதெய்வப்பொன்னி. (௬0)

உடைகரையடைத்துமள்ளரொருவழிச்செலுத்தலாலே
யடைமனுத்தகைக்கப்பட்டவரவெனவடங்கிச்சென்று
மிடைதருபொறிவாய்தோறும்விரைந்துபோய்ப்புகுமனம்போற்
புடையமர்மதகுதோறும்போய்ப்புகுந்ததுநீர்வெள்ளம். (௬௧)

கால்வழியோடியெல்லாக்கழனியும்புகுந்துமுன்னுட்
பால்படுவேனில்செய்தபற்பலகமருமொன்றச்
சால்புயர்தன்பாலாயபிளப்பெனச்சடுதிசெய்து
கோல்வலிமன்னரார்ப்பக்குறையறுத்ததுநன்னீத்தம். (௬௨)

சிவவியாபகமேயென்னச்செய்யெலாந்தகவிற்புக்க
உவமையில்வெள்ளநோக்கியுவகைமேற்கொண்டமள்ளர்
கவலரும்பழையர்பாற்போய்க்கடைவழிதரக்கண்மாந்தித்
தவலருமுழன்மேற்கொண்டுசார்ந்தனர்பழனமெங்கும். (௬௩)

பெருவலித்துணைக்கடாவின்பியலுறநுகங்கிடத்திப்
பொருவருமதற்குநாப்பட்பொருந்திடவேர்க்கால்சேர்த்தி
மருவுறவிடக்கைமேழிபிடித்துமற்றொருகைமேவ
வொருகுறுமுட்கோல்பற்றியுழுவராலுரப்பிமள்ளர். (௬௪)

குடதிசைநின்றுமள்ளர்குணதிசைச்செல்லவுய்த்தும்
வடதிசைநின்றுமற்றைத்தென்றிசைமருவவுய்த்து
மிடர்செய்புல்லாதிமாயவிரும்படைச்சானெருங்கத்
தொடர்பலவிளாக்கள்கோலியுழுதனர்தொள்ளிசெய்தார். (௬௫)

செறிபலவுயிர்காப்பாளர்சிதைவுசற்றடைவராயி
னறிதருபயன்கொள்வார்மற்றதுதவிர்த்துயர்த்துவார்கள்
செறிபலபயிர்காத்தோம்பும்வர்ப்புறுசிதைவுநோக்கி
யறிதருமுழவர்தாங்கங்கரிந்துயர்த்தினர்மென்மேலும். (௬௬)

உழுதொழில்புரிந்தகாலையழுந்தலோடுழ்த்தறந்தா
டழுவியதுணர்ந்துமாற்றித்தனிபிறுமஃப்பெய்வார்போல்
வழுவறுபரம்புபூட்டிமற்றதன்மேற்கொண்டூர்ந்து
கொழுநிலமாடியென்னச்சமஞ்செய்தார்குலவுமள்ளர். (௬௭)

மருதநன்னிலத்துவேந்தைவயல்வளம்பொலிகவென்று
எருதுபுகைகள்கூப்பிக்காமருமணநுங்கூர்செந்நெற்
குருமுளைவாரிவித்திக்கொண்டநீர்மறுநாட்போக்கிப்
பருவலிமள்ளரோம்பமுளைத்தனபழுதொன்றின்றி. (௬௮)

உறுமழைப்பசியறிந்துபாலூட்டியோம்புந்தாய்போற்
குறுமுளையளவறிந்துதகுதியிற்குளிர்நீர்பாய்த்திச்
செறுவலிமள்ளரோம்பச்சீமருமகள்வெற்பீன்ற
நறுநுதலுருவுற்றென்னவிளரொரீஇப்பசந்தநன்கு. (௬௯)

பல்லுயிரடையமாயைப்பாலமைபோகமெல்லாம்
புல்லுறவளந்துநல்கும்புண்ணியப்பெருமான்போல
நல்லியற்கழனிமேவநாற்றங்காறனைத்து
மொல்வகைப்பறித்துநட்டாரொன்றொழியாமன்மள்ளர். (௭௦)

ஈன்றவள்கிரகநின்றும்விருத்தியாங்கிரகமெய்துஞ்
சான்றவொண்ணுதலாராங்குத்தாழ்ந்தனவொழுதல்போல
வான்றபல்வயலுணட்டநாறெலாமமையத்தாழ்ந்து
தோன்றமேலெழுந்ததோம்புந்தொழிலினவொழுந்துள்ள. (௭௧)

புலைமிடிபிணிமுன்னானகல்வியைப்பொருந்திற்றென்ன
வலைதருகாமமாதியருந்தவத்தினைச்சூழ்ந்தென்ன
மலைமலமாயைகன்மம்வளருணர்ச்சியைச்சார்ந்தென்னத்
தொலைவில்பல்களைகள்வந்துசூழ்ந்தனபயிரைமாதோ. (௭௨)

உயிர்மலமுழுதுமோப்பக்காலமோர்ந்துறுபெம்மானிற்
பயிரிடர்முழுதுந்தீர்ப்பான்பருவந்தேர்ந்தடைந்தவாட்க
ணயிர்படுமதுரத்திஞ்சொலுழத்தியரடங்கக்கூடித்
தயிருடைமத்தேயென்னக்களைபலசாடலுற்றார். (௭௩)

முண்டகமனைத்துங்கொய்வார்கொய்தவைமுருங்குமாறு
கொண்டபங்கயப்பேர்தேர்ந்துகுளிர்ந்தசேற்றிடுதல்செய்யார்
கண்டபல்குலையுஞ்சேர்ப்பார்கதிருங்கண்ணோட்டமின்றித்
தண்டலிலுணவாம்பைங்கூழ்க்கூறுதலுணர்ந்துசாடும். (௭௪)

அடிகரமுலைக்குமாறுவலரும்படங்கக்கொண்ட
முடிவருமம்புயத்தைமுருக்கெனக்கண்கள்காட்டத்
தடிதருமவர்கைகாட்டுந்தாரைவன்பகையாமென்று
கடிதருங்குவளையெல்லாங்காமருகழனிமாட்டு. (௭௫)

பரம்பரன்முடிமேலேறும்பாங்குடைக்கமலமெல்லா
நிரம்புநீரோடையாவிநீத்துநீர்சிறிதேதங்கும்
வரம்பமைசெய்யுண்மொய்த்தவண்ணத்தாலுழத்திமாதர்
கரம்பறித்துதிர்க்கவன்னார்காற்றுவைப்புண்டவெங்கும். (௭௬)

இடவியவாவியோடையெனப்படும்புக்கினித்துத்
தடநெடுஞ்சாலிமேயசெறுவெனுந்துச்சில்சார்ந்த
மடமையாலிருகோணட்டுமற்றிருகாலப்பூவும்
படரடைந்தொழிந்தயார்க்குமொதுக்கிடம்பண்பதன்றே. (௭௭)

பிடிநடையுழத்திமார்கள்பிறங்குநன்னிலத்துவேந்தற்
கொடிதலில்செல்வமெல்லாமொழியமுன்செய்ததிந்த
கடிமலரொன்றேயென்றுகமலங்களனைத்துங்கொன்றார்
படியமற்றதுசார்பூவும்பாற்றினார்விடுவார்கொல்லோ. (௭௮)

விளைநலத்தழுத்திமாதர்விரிசெழுங்கமலப்போதுங்
களைகெழுகுவளைப்போதுங்கைரவப்போதுமற்றை
வளையியல்கொடியுமஞ்சைவலங்களுநனிமுயன்று
தளைவிடப்புரிந்தார்கல்லாரொனும்பெயரவர்க்கேசாலும். (எகூ)

நிலம்வெளிவழிச்செலுத்திநெடும்புரஞ்செற்றபெம்மான்
பலவகைதடிந்தசின்னம்பண்புறுமெய்ப்பூண்டாங்குச்
சிலமலர்குழலில்வேய்ந்தார்சிலமலர்கையிற்கொண்டார்
சலமலிபண்ணைநீங்கித்தாமமரிருக்கைபுக்கார். (அ0)

களையொருங்கறுதலோடுவுகருநிறங்கொடுசெஞ்சாலி
விளைபயிர்காமமாதிமேவுறுத்தவத்தினோங்கி
வளைமதிமுடியான்பாதமலரடைந்தவர்கைத்தானத்
தளைபயுன்விளைத்தல்போலொன்றனந்தமாய்விளைத்தபண்ணை (அக)

மனக்கினிதாயபூக்கன்மடிதரற்கேதுவாஞ்சொ
லினக்குமேலெழுதிர்ப்பாமென்றெண்ணிவெங்கலியைநாளுஞ்
சினக்குமற்றவைகளுற்கொண்டுவெளிவிடநெரிந்துமேன்மேற்
கனக்குமாசெய்தழிர்துகதிர்கவிழ்த்ததுநீர்தெவ்வி. (அஉ)

பதடியொன்றேனுமின்றிப்பழுத்தசெஞ்சாலிநோக்கி
மதவலிமள்ளர்யாரும்வேதினமங்கைவாங்கி
முதலரிந்தவணிவிழ்த்திமுதுசுமையாகயாத்துச்
சுதமில்வண்களத்துத்தந்தலைமிசைசுமந்துசேர்ப்பார். (அங)

போற்றுசெஞ்சாலிபல்லபொன்மலையெனப்போர்செய்துந்
தோற்றுவெண்சாலிவெள்ளிக்கிரியெனத்தொகுபோர்செய்து
மாற்றுபல்குறியுஞ்செய்வாரடுகடாபலபிணைத்து
விற்றுவிற்றுகவப்போர்தள்ளுபுமிதிக்கவிட்டார். (அச)

உழுதவன்காளிலிந்நாளுவகைசெய்கன்னுளென்று
முழுவலியொருத்தலெல்லாமுதுகளஞ்சூழும்போது
கொழுவுவைவாயிற்கவ்விக்குதட்டுபுநனிமுயன்று
தழுவியபலாலமின்றும்பிரித்தனசாலிமுற்றும். (அரு)

சொற்றவைபுத்திப்போக்கித்தூற்றிநெற்குவித்தளந்து
கற்றவன்மறையோர்முன்னுக்களச்செலவொருங்குசெய்து
கொற்றவனுறிலொன்றுகொளக்கொடுத்தெச்சம்வாரி
முற்றவுமனைக்கணுய்ப்பார்முழக்கம்விண்செவிடுசெய்யும். (அசு)

அரிசனஞ்செறியுமிஞ்சிவாதியவகழ்கின்றாரும்
விரிதலைக்கரும்புவெட்டியுடைத்தலைமேற்கொள்வாரு
மெரிதரப்பாகுசெய்துகட்டிகளியைக்கின்றாரும்
பொரியவாத்தேமாவாதிப்பூங்கனிகொள்கின்றாரும். (அஎ)

கந்திகளீன்றதாற்றுப்பழம்பலகவர்கின்றாரும்
புந்திசெய்கல்லாரோடுபுதப்புனலாடுவாரு
முந்தியகிழத்திமார்தமுடலையுணர்த்துவாரு
முந்தியநகரமெங்குமொய்த்துளாரிடையரூமே. (அஅ)

## திருநாட்டுப்படலம்.

மன்னியவாரூர்நல்லம்வாஞ்சியமிழலையம்பர்
பன்னியபுகழ்க்கோமுத்திபகரிடைமருதுநாளு
மின்னியகுடந்தையையாறுயர்வளமிகுமாயூரந்
துன்னியபிறவுங்கொண்டமருதம்போற்றாயதுண்டோ. (அ)

### நெய்தல்.

வாய்ந்தவிண்ணுலகங்காக்கும்வள்ளலாயிரங்கண்கொண்ட
தேய்ந்தபல்வளமுநோக்கற்கெனப்பொலிமருதவைப்பி
னாய்ந்தசில்வளமுஞ்சொற்றுமல்லம்யாமலர்ப்பூம்புன்னை
தோய்ந்தபைங்கானநெய்தற்றெருகுவளஞ்சிறிதுசொல்வாம். (க0)

வலிகெழுசுறவுகைக்கும்வருணனாற்புரக்கப்பட்ட
பொலிவுடையதுநீர்நெய்யிற்பொலியழற்குண்டமாகி
மெலிவில்பல்பரதவர்க்கூண்விளைநிலமாகியோவாக்
கலியமைகடல்விராயகருங்கழிநெய்தல்வைப்பு. (கக)

மணிகளும்பொன்னுமாயமான்பெருஞ்செல்வமேவிக்
கணிதமில்பெருமைவாய்ந்தகடற்குவர்புலாலென்றேனுந்
தணிவரும்பழியிரண்டுந்தபுத்தலிற்புகழாமென்றே
யணிகொள்புன்னாகமாதியலர்ந்துதேனாற்றம்வீசும். (கஉ)

ஒருதினமுதல்வன்பாற்பொய்யொன்றுரைதோடநீங்க
வருதினமெல்லாங்கைதைவருதிரைமூழ்காநிற்குங்
கருதிதுகண்டுந்தீரார்களைவர்பொய்யென்றுஞாலத்
துருவினரொன்னிற்றீர்க்குமுபாயமென்னுணர்ந்தார்கொல்லோ. (கங)

கூடியபவளக்காட்டிற்கூன்வளையூர்ந்துசேற
லாடியபெருமான்வேணியணிபிறைதவழ்தலேய்க்கு
நீடியவல்லியொன்றுநிற்கமீன்சுற்றுந்துள்ளல்
வாடியமருங்குற்கூத்திவாளாட்டுவினோதந்தேற்றும். (கச)

வடுவகிரனையவுண்கண்வலைச்சியர்மீன்பிளத்த
றெடுகடலுப்புமாட்டலுணக்கல்சூழ்தருபுள்ளோப்பல்
விடுதல்செய்திடலானுண்டாமேனியிற்புலவுநாற்றங்
கெடுவகையனையவாம்பாற்கேதகைவாசம்வீசும். (கரு)

கலத்துநின்றிழியும்வேழங்கருநிறங்கெழுபுன்னாக
நலத்தறல்குடித்தமேகநாடிவேற்றியவேண்டி
னிலத்தியைநடையாலென்றுநிலைகொடுநிற்றலான்மேல்
வலத்துறவெழலாலன்றிமற்றென்றலறியலாகா. (கசா)

உறுதிமில்விடுக்குமோதையுமணருப்பளக்குமோதை
பெறுவலைவீசுமோதைபெற்றமீன்கவருமோதை
மறுகுநீர்குளிக்குமோதைவளைபலபோழுமோதை
யிறுபன்மீனீர்க்குமோதையெழுகடலடைக்குமோதை. (கஎ)

இழிபொருளுயர்வுசார்ந்தாலுயர்பொருளிழிவுசார்ந்தாற்
கெழியதன்குணமாமென்றேகிளத்தன்மெய்புலவுசார்ந்த
கழிநறுநீலந்தீயபுலானாறுங்கழிபுலான்மீன்
கொழிநறுநீலஞ்சார்ந்துமலர்நாறுங்குணமீக்கொண்டே. (கஅ)

போதலிலாகூழுள்ளார்பொருண்முயன்றீட்டுங்காலை
நோதலிலாதமந்தப்பொருளுறநுவலக்கேட்டோங்
காதலினுவ்வாயுந்திக்கணக்கின்மீன்குவிக்கும்போதே
யாதலுண்டாகத்துள்ளியாவயின்விழுவபன்மீன். (கூகூ)

இடையின்றுமெழுந்தமாலிற்கிளர்கரும்புன்னைமிற்குந்
தடையின்றிப்பவளவல்லிதழுவன்மாத்தழுவனேரு
முடையபொன்றழுவவம்மானகையொருங்குற்றுலென்ன
யிடைதருகுழைமுகத்துவெள்ளியவரும்புதோன்றும். (க00)

வலைமடமகளிர்காயுமயிலைமுற்சாரவொட்டா
தலைபுரிகுவரானுமாவயினகலாபுட்டங்
கொலைபுரிமதனேவாயகொழுமலருண்டுமன்னர்
தலையமைபோருண்டென்னுந்தன்மையுட்டெரிந்ததொத்தே. (க0க)

முடிவலையெடுத்தவீசிமொய்த்தமீன்பலவுங்கொல்லுங்
குடிகளையிழிந்தவென்றுகூறுதற்கஞ்சுகின்று
முடிவலையெடுத்துவீசிமொய்த்தமீன்பலவுங்கொன்றே
யடியரிலொருவராயவதிபத்தர்பெருமையெண்ணி. (க0உ)

மறையெலாமருச்சித்தேத்தவள்ளலாரமரும்வைப்பு
மறையுமோர்தவத்தினுனைக்காயத்தாரோகணித்து
முறையருள்செய்துநாளுமுதல்வனாமரும்வைப்பு
நிறைதருதவத்தநிந்தநெய்தலோமற்றுமொன்றோ. (க0ங)

மயற்பகையனைத்தும்வென்றமாதவத்துயர்ந்தோனாய
வியற்பகையென்னும்வள்ளலெம்பெருமானைக்கண்டு
செயற்படுமொருசாய்க்காடுபல்லவனீசஞ்சேர்ந்த
தயற்படுநிலமோநெய்தலெனிலதன்றவஞ்சற்றுமோ. (க0ச)

பாலை.

வளமலிமுல்லைவாயின்மயேந்திரப்பள்ளிமுன்று
வளவறுதலங்கடன்னுளடக்கிமற்றளவின்மேன்மை
யுளதெனவெவருங்கூறவுறுநெய்தல்வளமென்சொற்றும்
பளகறுபுலமைவாய்ந்தீர்பாலையின்வளமுஞ்சொல்வாம். (க0ரு)

வேறு.

சொற்றநானிலவெல்லையுட்சண்டலாயொதுங்கப்
பெற்றதெந்நிலமந்நிலம்பெருமுதுவேனி
லுற்றநன்பகற்பாலையென்றொருபெயர்பூணுங்
கொற்றமேவுறக்காத்திவிதோம்புவாள்கொற்றி. (க0சு)

நீரிலாநிலமாயினும்வேம்புகனிரம்பிச்
சாரிலார்தருநிழறருமீந்துகடைந்து
பேரிலாப்பசிபேர்தருகனிதருநெல்லி
யோரின்வாய்ப்புனலுறச்செயுமினப்புகழுறவே. (க0எ)

எந்நிலத்தருந்தோல்வியையெண்ணுநரல்லர்
நன்னிலத்தமர்ந்தென்பயனெனவதைநண்ணி
யந்நிலத்தமர்கொற்றிதனடிதொழுதந்த
வெந்நிலத்தமர்பூக்கொளினினியெவன்வேண்டும். (க0அ

மன்னுபல்பரன்முரம்பினைவளையெனவாங்குத்
துன்னுவிம்பவண்கவிசிவக்குறியெனத்துணிந்து
பன்னுபல்கமுகளாவுவவாரணப்பறம்பின் *
பின்னுசோதியைச்சூழ்கமுகடைவதுவிழைந்தே. (௧௦௧)

ஒல்லுமிந்நிலம்பயனிலதாகுமென்றுரைப்பார்
புல்லுமற்றதனுண்மையைப்புந்தியுட்குறியார்
சொல்லுமெந்நிலத்துள்ளதாலிந்நிலந்துறைந்த
கல்லுநல்லுணவாயுயிரோம்புதல்கருதின். (௧௧௦)

பரவுகோங்கங்களெங்கணுமுகுத்தமென்பஞ்சு
விரவுதன்மையானடப்பவரந்நிலமிதியார்
கரவுதீர்தரநோதலுமிலரொனிற்கனையு
முரவுசாலவர்சுரநிலத்தவரொனலொக்கும். (௧௧௧)

## திணைமயக்கம்.

செற்றமார்மறத்துவலை * யார்குரம்பைகள்செறியக்
கொற்றமேவியகொற்றிவாழ்கோட்டமுட்கொண்டாங்
குற்றயாவர்க்குங்கூடுமாறருள்சுரத்துறுசீர்
சொற்றனம்மினித்திணைமயக்கமுஞ்சிலசொல்வாம். (௧௧௨)

வளையகம்பொலியொருதருத்தேத்தடைவழியும்
புனையிலின்மதுப்பொதுவியர்பாற்கலத்தேற்ப
வினைசெய்கானவான்பான்மதுக்கலம்விழைந்தேற்பா
ருனைசெயுங்கொடிச்சியர்பரிவருத்தனையுன்னி. (௧௧௩)

கானவேறுபுற்றினைக் * குதர்ந்தெழக்கண்டகழனித்
தானவான்பகடடிகொடுதளையினைவெட்டு
ஞானநாயகனூர்திகண்டொருநமனூர்தி
யானதஞ்சிமண்புகமுயன்றிடுதிறனமையும். (௧௧௪)

நல்லநீர்வயனின்றெழுவயலைமாநரலைப்
புல்லென்னிரளாமுவர்ப்புனனின்றெழுபவள
மெல்லவந்துசெய்நல்கீரளாமிருவினையா
லொல்லைமேன்மையுங்கீழ்மையுமாறுறுமுயிர்போல். (௧௧௫)

குன்றமேவியவிறவுளர்சிறுமகார்குழுமி
வென்றவெம்புலித்தோலுகிர்பறித்தனர்வீச
வொன்றநெய்தலங்குழமகார்ஞாழலொள்ளரும்பு
நன்றவாவுபுபறித்தெதிர்வீசினர்நகுவார். (௧௧௬)

கரியகுன்றமர்பசுமயிலாலுதல்கண்டு
பிரியமேயகானகத்துவான்கோழிபேருலகந்
தெரியவாடுவபற்பலகலைகளுந்தெளிந்த
வரியர்போன்றுபுன்கவிஞரும்பயிலுமத்திறம்போல். (௧௧௭)

குரவுதாங்கியபாவைக்கான்பால்வநங்கொடுக்கும்
விரவுவாரிமுத்தெறிதரும்பணைகழைவீசு
முரவுமால்வரைபொன்மணிமுதலியவுதவும்
பரவுபாவையென்றுற்கொடார்பாரிடத்தெவரோ. (௧௧௮)

---

* குதர்தல் சிதறுதல்.
* உவலை - ஓட்டை.
* ஆரணப்பறம்பு - வேதாசலம்.

நலமலிந்தவிவ்வளங்கெழுசோழநன்னாட்டு
வலமலிந்தபல்குடிகளுந்தமக்குரிமரபிற்
புலமலிந்தநல்லொழுக்கமன்பமைதரப்பொருந்திப்
பலமலிந்தவான்றிருவொடும்பொலிவபன்னாளும். (கககூ)

பொன்றுநேர்தராப்புலவர்பல்லோர்களும்புகழ
மன்றுநீர்வளநாட்டின்வான்சிறப்புறச்சொல்வான்
முன்றுமாசைமஃறொருவிதந்தணிதரமொழிந்தாங்
கன்றுமேன்மைமாயூரத்தின்வளஞ்சிலசொல்வாம். (கஉ0)

திருநாட்டுப்படலமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம். கஙுரு.

# திருநகரப்படலம்.

பாங்குசேர்தவமுடையரோவசித்திடுபண்பாற்
றாங்குவார்சடைப்பிரானுமையொடுமமர்தகவால்
வீங்குபேரொளியாலழியாதமர்விறலா
லோங்குவான்சிவலோகமேகௌரிமாயூரம். (க)

சொற்றபல்வகைநூலுந்தன்பாலின்றுதோன்றப்
பெற்றமேன்மையாற்பரன் * அகப்பொருளெனப்பெற்று
மற்றவானவர்புறப்பொருளெனக்கொண்டமாண்பா
லுற்றமாமறைபோல்வதுகௌரிமாயூரம். (உ)

கரியமான்மகன்கண்டபன்னகரத்துளொன்றே
லரியவாமலர்த்தூயவன்வழிபடற்காமோ
பிரியமேவவெம்பிரான்புரிநகரொனல்பெற்று
முரியநான்மறைமுழக்கருக்கௌரிமாயூரம். (ங)

மருவுமெண்டிசைப்பாலர்கண்மலரவன்மாயன்
பொருவுதீர்தருமொவ்வொருபதமுறப்போற்றத்
திருவொடுந்தருவள்ளலார்செறிதிருநகரோ
வுருவமற்றுமொன்றொப்பதோகௌரிமாயூரம். (ச)

முத்தவாணகைச்செய்யவாயரம்பையர்மொய்த்த
சுத்தமாநகராயதொல்வானகரொன்றும்
* அத்தமாநகரொன்றெடுத்தியாவருமறைதற்
கொத்தவேதுவாமுழுநகர்கௌரிமாயூரம். (ரு)

தேனவாங்குழலஞ்சனநாயகியொடுதெய்வ
வானநாயகர்வள்ளலார்மருவுமாயூர
மானமோவுபேரொளிகொடுவயங்கலால்வானத்
தானமாநகர் * நிசிநகரொனச்சொல்வர்சான்றோர். (சா)

---

* அகப்பொருள் - அகநகரத்துப்பொருள்.

* அத்தமாநகரம் - பெரியபாதிநகரம் எனவும், பெரியபொன்னகரம் எனவுங்கொள்க.

* நிசிநகர் பொன்னகர் எனவும், இருணகர் எனவுங்கொள்க,

வளமுன்னாகியநால்வகைநிலவளமதித்தே
புளையிலாநிலஞ்சுரநிலமெனப்புகல்வதுபோ
லுளைசெய்மேன்மைமாயூரநான்கெல்லையுளோர்ந்தே
களைவர்வானகர்சுரநகரெனப்பலகற்றோர். (எ)

பரித்தபல்வளக்கௌரிமாயூரமிப்பாரோ
யுரித்தவாயுறைவதற்கெனவுறையவும்வருநீ
விரித்தமேலென்பாலமர்வதென்னெனமதியிளிர்வான்
சிரித்ததாகும்பொன்னகரினைத்தாரகைச்செறிவு. (அ)

விரிதரும்புகழ்க்கௌரிமாயூரத்துவிளங்கும்
பரிகள்குஞ்சரம்பசுநிதிதருமணிபல்ல
தெரியுமிவ்வளனமைதராச்சிறியபுன்னகரைப்
பிரியமிக்கதற்கொப்பெனவெவர்சொல்லப்பெட்பார். (கூ)

அளகையென்பதுமிகுபொருளுடையதேயாநும்
பளகறப்பகுத்தீதராமையினுவர்ப்பரவை
தளர்விலாநிதிபடைத்தமாயூரஞ்சார்ந்தோர்க்கு
வளநிலாவுறக்கொடுத்தலால்வயங்குபாற்புணரி. (க0)

வேறு.

அன்பினையருள்சூழ்ந்தென்னவருளினையமலச்சோதி
வன்புறும்படிசூழ்ந்தென்னமயிலாடுதுறையென்றோது
மின்புகழ்மாயூரத்தையெற்றைக்குஞ்சூழாநிற்கும்
பொன்புலமெனக்கொண்டார்க்குநிழல்செயும்பொங்கர்ச்சோலை. (கக)

தெருள்வளரருளைச்சூழ்ந்தசிவப்பிரகாசத்தூடே
பொருள்வளரிடையறாதவானந்தம்பொலியுமாபோ
லருள்வளர்மயிலைசூழ்ந்தவந்தளிர்ப்பொழிலினூடே
கருள்வளர்கலிதீர்செஞ்சொற்காமருகழனிமல்கும். (கஉ)

வயலகம்பொலியாநின்றவான்கழைக்கருப்பங்காட்டோ
டயலமர்தருவிற்றேமாங்கனிவநமளாவுந்தன்மை
யியல்வளர்காழிஞானசம்பந்தவிளவேற்றோடு
மயறவிர்ஞானவாய்மைவாகீசர்கலந்ததொக்கும். (கூ)

கரியபுன்னாகநிற்றனிற்கின்றவடுகெற்காட்டுந்
தெரியுமுக்கிளைக்கோடொன்றுதிருக்கையிற்சூலங்காட்டும்
புரிதரவருகுவெள்ளைமுழுமதிபொருந்தமேவ
லரியமற்றொருகைமேய்வயன்றலைமண்டைகாட்டும். (கச)

மதுவுகக்குழிந்ததேத்துவாழைமாங்கனிகள்சேரப்
புதுமணங்கொழிக்குமற்றைநக்கனிகளும்பொருந்துங்காட்சி
முதுபுகழ்ச்சிவத்தானத்துக்கவுணியமுதல்வாகீசர்
கதுமெனப்புகுதச்சூழுமடியரோகடுக்குமன்றே. (கரு)

களையமர்கதலியின்றகாமர்பாசிலைமேல்வீழ்ந்து
வளையறைதவிர்செஞ்சாலிக்கதிர்பலவருடுந்தோற்றம்
புளைசெய்மேற்போர்வைநீத்துப்போற்றுதண்டுலமாய்ச்சோறு
புளைகெழப்பின்புமேவுமுறிமைமுன்னுறுதல்போலும். (கசு)

மயிலியலென்றுகூறும்வழக்கறமயிலேயாய
குயின்மொழியுமையாள்பூசைகுயிற்றியதானமென்று
வெயினிலவாகுஞ்சோலைவிரிமலர்க்கொம்பர்தோறும்
பயினடமியற்றுகிற்கும்பசுந்தழைத்தோகைமஞ்ஞை. (௧௭)

சோலைசூழ்மாடைதோறுந்தொடுபுனற்பட்டந்தோறு
மாலைவாய்மலர்செவ்வாம்பன்மலர்பலசெறிந்துதோன்ற
லாலைசூழ்திருவாரூரினமிநந்தியடிகணீர்மேற்
பாலையார்பற்பதீபம்பரப்பியகாட்சிமானும். (௧௮)

நால்வகைமலரும்பூத்தநந்தனவனங்கடோறு
மோல்வகையொழியாவண்டொருங்குறவிளைக்குங்காட்சி
நால்வகைமுழங்குந்தேவர்நானந்திர்ந்தமர்தேமென்று
மால்வகையவுணர்பல்லோர்வந்தவந்தடைதல்போலும். (௧௯)

புறநகர்.

கலைபுகல்வளஞ்சான்மேன்மைக்கௌரிமாயூரச்சீர்த்தி
யலைவரும்பொருமைதன்விலறைந்தனஞ்செல்லவப்பா
னிலைபுறமிடையுள்ளென்றுநிகழ்த்திடுநகரமூன்று
ளுலைவறுபுறமென்றோர்நகர்வளஞ்சிலவுரைப்பாம். (௨௦)

உம்பராதியர்பல்லோர்க்குமுறுதிர்வலியேரம்பத்
தம்பிரானடைந்ததெங்களுருப்பொன்றன்சார்பாலென்னிற்
பம்புபல்லுருப்புஞ்சேர்ந்தவெம்வலிபகர்வார்யாரொன்
றிம்பரையுணர்த்தியாங்காங்கியங்குவவெண்ணில்யானை. (௨௧)

நரைமுதலெட்டுமாயதம்பிரான்மேனிமுற்றும்
புரைதபமறைத்ததொன்றுபோர்த்தியதோலேயென்னிற்
கரைசெயெம்முடம்பின்பாழிகளைக்கிடப்படுமோவென்று
வரையறமுழங்கியென்னமுழங்குவமதமால்யானை. (௨௨)

கறையடியென்றுந்தந்தாவளமென்றுங்கரியென்றும்பா
ரறைதருநால்வாயென்றுமவிர்புகர்முகமதென்று
மிறையிலொவ்வோருறுப்பான்மிகுதியும்பெயர்பெற்றோம்யாங்
குறையுளபிறவென்றெள்ளுங்குஞ்சரமனந்தமாங்கண். (௨௩)

எங்கடந்தலையிற்கோடொன்றில்லதையெய்தப்பெற்ற
திங்களஞ்சடையான்றுளிற்றிறனரமடங்கற்சென்னி
பங்கமுற்றொழியத்தாழும்படிகண்டுமரிதெவ்வென்பார்
தங்களொள்ளளிவென்னென்றுதந்தத்தானகைக்கும்வேழம். (௨௪)

மருவலர்மருமம்போழுமருப்பினமகுடச்சென்னி
திருகுறுங்கரத்தயாக்கைசிதைதரத்தேய்க்குந்தாள
வெருவருமுகிலுமஞ்சமுழக்கினவென்றிகோட
லொருவருமதமால்யானைவாரிகளுலப்பிலாத. (௨௫)

அரிவிறலுருவங்கொண்டவரியெனப்படுமோர்தேவும்
விரிதருமீற்றிலெங்களுருக்கொளல்வேண்டுமென்னிற்
புரியுமெம்முருவச்சீர்த்திபுகலுதற்கடங்காதென்று
தெரிதரமுழங்கல்போலச்சிலைத்தனதிரிவபாய்மா. (௨௬)

எங்களினுன்குகூடியிமையவர்கூட்டத்தோடு
துங்கவெண்கயிலைமேயசோதியைப்புவிமேலேற்றிப்
பொங்குமுன்னீர்த்தவென்பார்புகழ்தன்ருன்றேசாலு
மங்கதுதெரிவார்யாரொன்றியம்பலினூர்க்கும்வாசி. (உஎ)

மறைமொழியந்தணாளர்வழாதமுப்பொழுதுஞ்செய்யு
மிறைபெருஞ்சகாயத்தாலேலிகழுமோராழிபூண்ட
பொறையிலாவொருதேரீர்த்துப்போமெழுபரிகளிவ்வூர்க்
குறைவிலாவொன்றேயிர்க்குஞ்சகாயமுங்குறிக்கொள்ளாதே. (உஅ)

ஆயதம்முருவங்கொள்ளுமலங்கலந்துளபமாயோன்
மேயகன்மனையாளென்றுமெய்யுளத்துணர்ந்ததேயோ
பாயபல்புரவியெல்லாம்பார்வடுப்படுமென்றஞ்சித்
தோயவுந்தோயாவாகவடியிடாத்துவைந்துசெல்லும். (உக)

செறுநர்தஞ்செம்பொன்மோலிச்சென்னிமேற்குரமமுத்து
மறுதியினமயம்வந்தாலாழியோரேழுந்தாண்டும்
பெறுவதுவென்றியன்றிப்பெற்றறியாதவென்று
மறுவறுவாசியாத்தமந்திரம்பல்லவாங்கண். (௩0)

நளைகிழித்தேகுஞ்செய்யதாளும்விண்ணுலகமென்னும்
வளைகிழித்தேகுமம்பொற்சென்னியும்வாய்ந்தபொற்றே
ருளைகிழித்தேகுஞ்சீர்த் * தீயுருவன்பூண்கரியவாசி
புளைகிழித்தேகும்வெள்ளைத்துவசநாடிரண்டும்போலும். (௩க)

தழுவியதளிரியற்குக்குழைந்தவன்பாதஞ்சார
வழுவியவச்சுவாய்ந்தசயந்தனமாறுநாலுஞ்
முழுகியாருநினுமச்சுமுறிதராவினையபொற்றே
ரொழுகியசும்வாகிற்குந்தேர்ற்றதற்குறுவதென்னே. (௩உ)

மறையெலாமெடுத்துக்கூறுமாதேவனேறும்பொற்றே
ரிறையிலோரவுணன்வௌவிக்கரப்பதற்கியைந்ததன்றே
விறையொளியினையபொற்றேரதுபெருநிலைமையாலே
முறையின்மற்றதனோடொப்புமொழிதரல்குற்றமன்றே. (௩௩)

விளைதரவீர்த்துச்செல்லும்வெம்பரிக்குழாத்தையோடும்
புளைதபுசயந்தனந்தான்ருெடர்ந்ததுபோகுங்காட்சி
யுளைமறைக்காட்டினின்றுமும்பர்நாதனைவாசேர்
திளைசெய்சீர்வளஞ்சால்வாய்மூர்சேரத்தொடர்ந்ததேய்க்கும். (௩ச)

தரியலர்கூட்டமேவிற்றளைமிசைக்கிடத்தியேறி
விரிசுடர்மூளைநெய்த்தோர்பரந்திடமிகத்துவைக்கு
மரிமணிப்பொலந்தேருட்கொண்டலங்குயர்சாலைமேலாற்
றெரிதரவேர்ராழித்தேர்முதலியதிரிவமாதோ. (௩௫)

விழித்தகண்ணிமைத்தல்செய்யார்வேலெதிர்வந்தபோதுங்
கொழித்தபொற்கழற்கால்பின்னர்வைத்திடார்கூற்றுற்றாலு
மழித்தபல்லுறுற்றாலும்பிடித்தவாளங்கைசோரா
ரிழித்தசொல்லடையுங்காலத்துயிர்ப்பொறையெய்தாவீரர். (௩௭)

---

* தீயுருவன், அக்கினி மலையாகிய சிவபெருமான்.

தரியலரம்புமார்புத்தையவாம்வடுக்களன்றி
யுரியபொற்கலங்கள்வேறென்றுவப்புறுர்தெவ்விலாமைப்
பெரியகண்டேதின்னப்பித்தரிற்றிரிவார்கேரிற்
சரியவென்றிடலாமென்றுதடம்புயம்விங்கும்வீரர். (ஙஎ)

ஒருகையிற்பலகைமற்றையொருகையில்வடிவாடாங்கித்
திருகையுற்றமர்செய்வார்முற்செல்லுவாவர்பின்னிட்டாற்
பொருகைகொண்டமைக்குத்தம்மைப்புலந்துதாமேயிழிப்பார்
முருகையொப்பவரோனாந்துமுகமிலாக்குறையொன்றுண்டே. (ஙஅ)

இன்னபல்வீரர்வாழுமிருக்கையுமிவருக்கேவன்
மன்னநன்காற்றுவார்தம்வாழ்க்கையும்பரிமால்யானை
யுன்னதவிரதமற்றுமுள்ளவைதமக்குவேண்டு
மின்னகுபலவுமாற்றும்வினைஞர்தமிருப்பும்பல்ல. (ஙகூ)

## இடைநகர்.

அறநகரொன்றுபன்னூலறிந்தவரொடுத்துப்பேசுந்
திறநகராயதிராச்செல்வஞ்சேர்மாயூரத்தின்
புறநகர்வளத்தென்சொற்றும்பொற்பொடுபொலிவுநாளு
முறநகாரசாய்மன்னுமிடைநகருரைக்கலுற்றும். (ச0)

அளிவளர்கதுப்பினல்லாராடவரொடுங்குலாவு
மொளிவளர்மணிசெய்மாடமோங்கொளிபரப்பலாலே
களிவளர்கருப்புவில்லான்களிற்றிவர்ந்தேகல்செய்யா
னளிவளரொருதேரோரிச்சாளாதுமையுநாளும். (சக)

நன்னலங்கனிந்தமேனிநங்கையரிலக்கமாகக்
கன்னலஞ்சிலைபெய்வாளிக்கமலம்வாழ்வதனமுல்லை
பன்னலகறியகிலம்பார்வைகண்டனுகற்கஞ்சு
மின்னலமசோகமாம்பூவிரண்டுமஞ்சாதுமேவும். (சஉ)

மலையினும்பொலியுந்திண்டோண்மைந்தர்யாவரையும்வாங்குஞ்
சிலைநுதன்மடநலார்தந்திருமுகமினைப்புண்டாக்கும்
விலையில்வெண்ணகையேநாளுமிகுகிடைகாட்டுங்கண்ணே
கொலைசெயுமென்விற்காமன்கொடுங்கணைமிகையாமன்றே. (சங)

மேலுயரிந்துகாந்தவெண்ணிலாமுற்றத்திட்ட
காலுயர்பரியங்கத்திற்கண்டுயின்மாதர்மைந்தர்
பாலுயர்மதியந்தோன்றப்பொழிந்தநீர்பரத்தலாலே
சேலுயர்கடலிற்றுஞ்சுந்திருவொடுமாயனொத்தார். (சச)

வெள்ளியவிந்துகாந்தவெண்ணிலாமுற்றநாப்ப
ணெள்ளியவாடலாற்றியணைமிசையுறங்குநல்லார்
வள்ளியமதிகண்டாங்குவண்புனல்பெருகலாலே
துள்ளியகடலிற்பற்பதுகிர்க்கொடிப்படர்ச்சிபோன்றார். (சரு)

வானுயர்மாடமேலாற்றுமிற்கொடிவயங்கல்கண்ட
மீனுயர்கடல்வைப்போர்வான்றேறுவரிவிதமென்னென்பார்
கானுயர்கற்பகாட்டார்கண்டுமென்முளைத்தெழுந்து
தானுயர்தருவின்பாலோர்தளிருரும்பெயர்யாதென்பார், (சகூ)

மேலுயர்செம்பொன்மாடவெண்ணிலாமுற்றஞ்சார்ந்த
பாலுயர்மொழியாரொட்டிக்கற்பகப்பழம்பறிப்பார்
மாலுயர்வானநாட்டுமாதர்சற்றேகுனிந்து
காலுயர்மனைப்பாற்றேமாங்கனிபலபறித்துவப்பார். (௪௭)

புயறவழ்மாடமேலாலரிசனமாதிபூசி
வியனெடுங்கண்ணார்மண்ணிவிடுபுனலனையதேத்துக்
கயலொழுகாற்றுவீழவதின்முழுகமரர்தாம்வே
றியன்மணமதித்தடைந்நலார்க்கிடைந்திரங்கிச்சோர்வார். (௪௮)

ஓங்குபொன்மாடமேலாலொள்ளிழைமடவார்கூட்டிப்
பாங்குசெய்மஞ்சளாடல்பயின்றிடவனையமஞ்சள்
வீங்குவாசனைசுலாவமெய்மணங்கமழ்வதோரார்
தேங்குவானரம்பையர்க்குச்செயற்கைவாசனையின்றென்பார். (௪௯)

கொழிசுவைத்தமிழ்நேரஞ்சொற்கோற்றொடிமடநல்லாரும்
பழிதபுமைந்தாரும்பயிலுபரிகையின்மாட்டுக்
கெழியபன்மடவார்போக்கல்செய்யவுங்கிளர்ந்தகுப்பை
கழிதரக்காணார்பஞ்சதருக்களைக்கனன்றுலைவார். (௫௦)

வெள்ளியமுறுவற்செவ்வாய்விளங்கிழைமடநலார்சேர்
வள்ளியபொற்கீழ்மாடமண்ணுவபொன்னிநன்னீ
ரொள்ளியமணிச்சாலேகமுறந்தபொன்னொளிர்மேன்மாடந்
தெள்ளியபிறவுமண்ணுந்திருந்துவான்கங்கைநன்னீர். (௫௧)

துன்னியசெம்பொன்மாடச்சோபானமார்க்கஞ்செல்லின்
மன்னியசுவர்க்கலோகமருவுதற்கையமில்லை
மின்னியவவ்வாறேகாவிதமெவனெனவினவி
லுன்னியவஃதிவ்வூர்போற்சிறவாமையுணர்ந்தார்போலும். (௫௨)

காரும்வாரறலுமஞ்சுங்கதுப்பினர்செல்வமாட
மேருவோடிகலிநின்றவிந்தமொத்துயர்ந்ததேனுஞ்
சாருநாள்கோளியங்கச்சாளரம்விடுத்தலாலே
யோருமோர்முனிகைசெய்வதொன்றுமின்றுயிற்றம்மா. (௫௩)

வலிதருமைந்தரெல்லாமதனனேயென்னும்பொற்பார்
பொலிதருபரமன்மேலும்பூப்பலதூவுவார்க
ளொலிதருநுதற்கணுக்காதொழிந்ததென்னெனவினவின்
மலிதருபூவைப்பூவென்றெண்ணுதல்வாய்ந்துளாரே. (௫௪)

பொருவில்வெண்சுதைசெய்மாடம்பொங்குபாற்கடலாமேலா
லொருவருமடநல்லாராங்குதித்தெழுஞ்செய்யாளொப்பார்
வெருவருமைந்தர்வேட்டுமேவியமாயோனொப்பார்
பருவரலில்லாப்பாலர்பசுங்கழைக்குமரனொப்பார். (௫௫)

நறுமலர்கட்டிமைந்தர்நகுமனக்கட்டவிழ்ப்பா
ருறுவகைநோக்கியன்னுரொன்றுநோக்காதுசெய்வா
ரிறுமருங்கலசக்கொங்கையெடுத்தவரொடுப்பொழிப்பார்
மறுவறநடந்தன்னார்தநடையொழித்திடுவர்மாதர். (௫௬)

கண்டத்தினமுகைவெளவுங்களவழிந்தொறுத்தன்மானக்
கண்டொத்தமொழியார்கந்திக்கழுத்துறப்பாசம்பூட்டிக்
கண்டத்தகுழைகளாடக்காமர்பொன்னூசலாடக்
கண்டுற்றபுருடர்நெஞ்சங்கலக்கமுற்றூசலாடும். (௫௭)

வெயில்விடுமணிசெய்மாடமீமிசையநலாரை
மயிலெனவஞ்சியன்றேவானகத்திராகுகேதுப்
பயில்கதிர்மதியைநாளும்பற்றல்செய்யாவாம்பற்ற
லயில்விழிமடவாரங்கணமர்தராக்காலத்தம்மா. (௫௮)

மாதரார்வதனங்கண்டம்வயங்கிருநிதிகளாக
வோதமுத்தாரக்கொங்கையுவக்கும்வெள்யானையாக
கோதகமருங்குல்கற்பக்கோடாகநுவலுமைந்தர்
காதலிந்திரன்போல்வார்மெய்க்கண்ணிலாக்குறையொன்றுண்டே. (௫௯)

முரிதிரைப்பரவையல்குன்முயங்குமந்தரம்போற்கொங்கை
வரியரவொருமருங்குல்வயங்குறுநாங்களென்று
முரியவோடதிமடுத்திட்டுறுசுவையமுதங்கொண்டு
தெரியவந்நகர்வாழ்மாந்தர்யாவருந்தேவரொத்தார். (௬௰)

பெருகொளிமாடமேலாற்பிரசமென்கூந்தலோடு
முருகெழுமடநலார்தந்திருமுகத்தன்மைதேரார்
கருமுகிலென்பதம்மாகலிநிறைதருவிபத்தி
னருகமர்தருமறைத்தற்கஞ்சியதிறம்பூதென்பார். (௬௧)

செங்கயல்விழியாரொன்றுந்திருவளுருறுப்பேயென்றுந்
தங்களுளுணரார்கன்னிதவாச்சிலைகடக்கும்பந்
அங்கவண்மகரஞ்சிங்கமொவ்வொன்றேதுலங்குமிங்குப்
பங்கமில்பாரிற்பல்லவெனப்பகருவர்வானுடர். (௬௨)

வணக்கநன்குடையார்செல்வம்வாய்ந்தமேலாவர்நாளும்
வணக்கமில்லவர்கீழாவர்வழியராயெனநெறித்தாங்
கிணக்கவன்மூங்கின்மேல்கீழிலையைந்தயானத்துமேல்கொண்
டிணக்கநன்குடையசெல்வரியங்குறுசிறப்புமல்கும். (௬௩)

வடதிசைக்கிறையுநாணுமாப்பெருஞ்செல்வமுற்று
மிடமிகுமதைமதித்தலென்றுமில்லவரெஞ்ஞான்றுந்
தடமுகிலாதிநாணுந்தவாக்கொடையுடைத்தம்பார்க்கும்
விடலிலரிலியகூறல்விழையுமந்நகரமாக்கள். (௬௪)

பேரதிகாரத்தோடுபெருங்கண்ணோட்டமுநன்குள்ளார்
சாரருந்திறன்மையோடுதவாதவொப்புரவுமுள்ளார்
தேருமாசாரத்தோடுஞானமுஞ்சிறப்பவுள்ளார்
நீரரும்வளத்தாலோங்கிச்சிறக்குமந்நகர்வாழ்மாந்தர். (௬௫)

காவணமெங்குமிட்டுக்கரும்பொடுகதலியாத்து
மாவணவிதானந்தூக்கிவயங்குபொற்றொடைகளோடு
பூவணத்தொடையுநாற்றிப்புதுப்புனலிறைத்துக்கைசெய்
தாவணவியமவீதிசுவர்க்கத்தைநரகஞ்செய்யும். (௬௬)

மங்கையர்பின்பான்முட்டுமைந்தர்கள்வடிவுவாய்ந்த
வங்கவர்முன்பான்முட்டுமவர்க்குளநாணுவார்க
டுங்கநன்மைந்தர்பின்பான்முட்டியதொடிக்கைநல்லார்
தங்கமற்றவர்முன்பான்முட்டவர்க்குளந்தகநாண்கொள்வார். (௬௭)

வளையகத்துள்ளயாவும்வயலகத்துள்ளயாவுந்
திளையகத்துள்ளயாவுஞ்செருத்தலான்குலங்கண்மல்கு
தளையகத்துள்ளயாவுந்தழைதலானியமவீதி
புளையறத்திணையோர்நான்கும்புக்கினிதமர்தல்போலும். (௬௮)

மெல்லுவவொருபான்மல்கவிழுங்குவவொருபால்வீங்க
வொல்லுவபருகற்காயவுணத்திறமொருபாலோங்கப்
புல்லுவபிறவுங்கொண்டுபொலிதருநியமவீதி
சொல்லுவபோகபூமித்தோற்றமேயனையதம்மா. (௬௯)

உ ண் ண க ர்.

மிடைதருமைந்தர்மாதர்வேட்டுலாம்விழவுமாறு
விடைநகர்வளத்திற்சில்லவியம்பவும்வல்லர்யாரோ
கடையுறலென்றுமில்லாக்காமருசிறப்புவாய்ப்புற்
றடையவிண்ணகருநாணுமுண்ணகரறையலுற்றும். (௭௦)

ஆசையின்மேறுமெய்தவள்ளலாரருள்வதெண்ணி
யோசையினுயர்பாலாழியொத்திடநன்னீராழி
மாசையின்றுயமேன்மைவளம்பெறல்குறித்துச்சூழ்ந்தாங்
கேசையில்கிடங்குசூழுமகநகரிஞ்சிசூழ. (௭௧)

பாம்புரியெனவோர்நாமம்பகருவர்கிடங்கிற்கப்பேர்
நாம்புரியிதற்கேசாலுநாடுபல்பாம்புவாழ
வேம் * புரிவைப்பினுக்குமுரிமையின்மேவிச்சூழ்ந்து
தோம்புரிதெவ்வுமேவாவண்ணங்காப்பியற்றுஞ்சூளால். (௭௨)

எறிகளிறருகுமேவினுறுப்புத்தொட்டீர்த்தல்செய்யா
தறியமாலாழியோடுமெங்காந்துவிழுங்கவல்ல
செறிவலிக்கராங்கள்பல்லதிரிதருகிடங்குநன்னீர்
நெறியுயிர்திளையாவாற்றுற்கன்னியர்நிதம்பம்போலும். (௭௩)

தனையடைந்தவரையுள்ளேகொண்டுபின்வெளிச்சாராம
னினைதரவொளிக்குங்குண்டுநீர்க்கிடங்கெந்தஞான்றுந்
தனையடைந்தவரையுள்ளேகொண்டுபின்வெளிச்சாராம
னினைதரவொளிக்குமெங்கணின்மலப்பிரானேதேரோம். (௭௪)

பெரும்புறக்கடலீதென்றுபெருங்கிடங்கையுட்கொண்டு
விரும்புறமுகில்கள்வீழ்ந்துவிரிபுனனிறையவுண்டு
சுரும்புறமலருந்தாருச்சூழ்நேமிவரையீதென்று
தரும்புறமதின்மீதேறுந்தலையடையாதிளைக்கும். (௭௫)

---

* வேம் - வெம்மை என்னும்பண்புப்பகுதியிறுதியிலுள்ள எழுத்துக்கள் கெட்டுமுதனீண்டு, வருமெழுத்திற்கு இனவெழுத்துமிகுந்து, விருப்பமென்னும் பொருளைத் தந்தது.

அஞ்சனையகியாரோடுமமர்ந்தளவிலாவுயிர்க்குந்
தஞ்சமேயாகயாவுந்தருமொருவள்ளலார்த
மஞ்சவாம்புகழேபோலவானகங்கிழித்தப்பாலும்
விஞ்சவேசென்றதம்மாவிறலுடைநொச்சியிஞ்சி. (எ௬)

பொறிபலவடக்கியோவாப்புண்ணியமுதல்விபாகப்
பறிகிகர்சடைப்பிரானைப்பரவுதன்னகத்தேகொண்டு
சிறிதசைவேறுமின்றித்திகழ்நிலையமைந்தவாளை
மறிவறநோற்றல்வன்மைமருவியயோகிபோலும். (எஎ)

கொடிபலசெறியநிற்குங்கோணைமாமதிற்கணென்பார்
படியின்மற்றுள்ளவாயபன்மதிலகத்துங்கண்டோ
நெடியவிம்மதிற்கட்காணேநிலவமேலுள்ளவேநான்
முடியபுட்பறந்தபோதுமுற்றுமோகாண்டலம்மா. (எஅ)

இம்மதில்சிறிதுகண்டவெமக்குநேமியங்குன்றென்னு
மம்மதில்காணவேண்டுமாசைசற்றேனுமில்லை
மும்மதில்புரிந்ததுன்பமுழுமையுமறக்குமாறிச்
செம்மதிலுயர்ந்துசென்றுதேவரூர்பலவுங்காக்கும். (எகூ)

கடக்கருமதிலோர்மூன்றுங்கடந்தசேவகனைத்தன்னு
ளடக்கியமதிலின்மேன்மையளப்பவரெவரோவாயில்
விடற்கருமுயாஞ்சொல்லவேண்டுமோகோளுநாளும்
படற்கரும்பொன்செய்மேக்குப்படியுறுகிழங்கேசெல்லும். (அ0)

தம்மனமிதுபோற்கோணல்சமைந்ததென்றறிவிப்பார்போ
லம்மநல்யாழ்கைக்கொள்வாராயினுநவிலுமாற்றஞ்
செம்மையென்றறிவிப்பார்போற்றெள்விளியிசையெழுப்புங்
கொம்மைவெம்முலையார்சேரிகோலமார்துறக்கமேய்க்கும். (அக)

மின்னனார்கரங்குவிக்கமிளிர்சாமிகரங்குவிப்பார்
முன்னருமுத்தொன்றியமுகந்துபற்பலமுத்திவா
ரன்னர்நாணென்றேதோற்கவனைத்தையுந்தோற்பார்மைந்த
ரென்னின்மற்றவரிலாபமெய்துநர்மண்மேலியாரோ. (அஉ)

மெய்வாய்கண்மூக்குக்காதாமைந்தற்கும்விடயமாகி
மைவாய்கண்மற்றைநல்லாரின்புசெய்வழக்குண்டேனுங்
கைவாய்மிக்குளபொன்முற்றுங்கவருபுவெறுமைசெய்து
பொய்வாய்நெஞ்சிவர்போல்யார்க்குந்துறவின்பும்புணர்த்திடாரோ. (அங)

எத்துணையளித்தபோதுஞ்சாலுமென்றேமுருத
முத்தவெண்முறுவனல்லார்முதிரழற்பிரானேபோல்வா
ரத்தகுதிறனுலன்றேயவனையருச்சிட்டநாளும்
வித்தகமறையோராதியாவரும்விருப்பிற்கோடல். (அச)

வாடுதலற்றசெற்றமணமலர்புனைதலானும்
பாடுதல்வாய்ந்தசூழும்படமழுக்குறாமையானுங்
கூடுதலிரவேயென்றும்பகலென்றுங்கொளாமையானு
மாடுதல்வல்லமாதாரமடந்தையரோயொத்தார். (அரு)

பொருவருவனப்புவாய்ந்தபுலோமசையிட்டிறாறு
வெருவறமுடித்துள்ளாளைவிருப்பொடுதழீஇயுயர்ந்தா
டுருபதன்மகளோளாவர்த்தோய்ந்துமேல்விழைந்துயர்ந்தா
டிருவனுரிவருமன்னர்செப்புதற்கிழிபொன்றுண்டோ. (அசு)

வெள்ளணிபுனைந்துளாருஞ்செவ்வணிவிழைந்துளாரு
மொள்ளணிமைந்தர்க்குற்றதுணர்த்துவான்விலைமினூர்தந்
தெள்ளணிமறுகுலாவல்செழுங்கலைமகளுஞ்செல்வ
நள்ளணிமகளுமாங்குநயந்தனருலாவல்போலும். (அஎ)

ஆடவர்மகளிர்நன்னீராடலோர்ந்தகன்றநாளே
யேடவிழ்குழலார்பாற்பன்னிரண்டுநாளனுபவித்துக்
கூடலைவிரும்பிமைந்தர்புகுநாளாதலிற்குலாவு
நீடமைத்தோணல்லாருக்கொழிபுநாணேராதென்றும். (அஅ)

கயில்செறிகடகச்செங்கைக்கருங்குழலுமையைநீங்கி
யெயிலொருமூன்றுஞ்செற்றோனின்னும்யோகிருப்பானென்னின்
மயிலியல்பொழில்சுலாவுமயிலாடுதுறையின்மேய
வயில்விழிப்பொதுமின்னருக்கொழிபுநாளமையுமன்றே. (அகூ)

அவையவக்குறைவிலாமையாரழகுடைமைவாய்ந்த
குவைமலர்க்குழலார்போகங்கூட்டுணல்வெறுத்துமைந்தர்
செவையுறவூருந்தேருஞ்சிவிகையுமாவுஞ்செற்ற
கவைமனத்தஞ்சொலார்தமறுகியல்கழறப்போமோ. (கூ0)

அறைதருமேனீர்போலாதகம்புறமுஞ்சுத்தி
நிறைதருவிதஞ்செய்தெய்வநீர்க்கங்காகுலத்தவொன்னு
முறைதருபுகழுக்கேற்பமுயங்கிருசுத்தியும்பெற்
றுறைதருபுகழ்வேளாளர்தெருவளமுணாக்கலுற்றும். (கூக)

புதியராயடைந்துள்ளாரைப்பொன்னியந்துறைமிற்கோணன்
மதிநிலாமுடியார்கோயில்வாயிலிற்காணல்போலப்
பொதிபசியொழித்துவேண்டும்பொருள்கொளப்புகுதலாலே
திதிபெறுபுகழ்வேளாளர்தெருத்தொறுங்காணலாமே. (கூஉ)

வருவிருந்தெதிர்கொண்டேற்றுமனமகிழ்முகத்திற்றேற்றி
யொருவரும்விருப்பமிக்கூறுணப்பலவமைத்துக்கொண்டு
பெருகியமுகமனோடுபேணினருட்டிப்பின்னு
மருகமர்ந்தவாவலுந்தேர்ந்தளித்துமிக்குவக்குநீரார். (கூங)

விண்ணவர்பிறர்பாலன்புசெய்யாதுவிடையோன்பாலே
யண்ணலம்புகழ்வேளாளரன்புசெய்திடுவதோர்ந்தா
நண்ணல்செய்கடல்கடைந்தநாளடைந்தாரைவஞ்சித்
துண்ணல்செய்ததுமஃதாற்றுதுண்டதுங்கண்டேயன்றோ. (கூச)

இறைபடுசெந்நெலானும்யாவருஞ்செறிதலானு
முறைசெறிந்தவர்க்கப்போதேயிலம்பாடுமுடிதலானுங்
குறையில்பன்மரக்காலோடுகாவணங்குலவலானுங்
கறைதபுவேளாண்மாக்கடெருவவர்களமேபோலும். (கூரு)

குறியிலூசிபலசெருகக்கொடியகாலசூத்திரத்து
முறியநெடுநாளழுந்திப்பின்மூர்க்கவரக்கன்புலையனாய்
மறியுமரிட்டங்கோட்டானாய்க்கரமாய்நாயாய்வந்துழல்வா
னறிவிலவனுய்க்குருமனையையவாவிப்புணர்ந்தகொடியோனே. (௮)

பெற்றதாயைமுத்தாளைப்பிறங்கவுடன்வந்தவர்க்குரிமை
யுற்றதாரமடவாரையுளுற்றலரியவிட்டிசெயக்
கற்றமறையோர்பன்னியரைக்கற்புவழாதமங்கையரைச்
சொற்றவுபாத்தியாயரிருதோடோய்நலத்தமங்கையரை. (௯)

தந்தைகூடப்பிறந்தாரைத்தகுமாதுலர்தமனைவியரை
நிந்தையில்லாமாமியரைநிலவுஞ்சிறியதாயாரை
யந்தையகன்றகுருவின்றவநலாரைப்புணர்கொடியோர்
முந்தையாசானிற்புணர்ந்தமூர்க்கர்க்குரைத்தவெலாமுறுவார். (௧௦)

பந்திபேதஞ்செய்தல்குடும்பத்தில்வேறுவிதஞ்செய்து
முந்தியிருந்துபுசித்தல்சந்நியாசிகளைமொய்யிழிபுரைத்த
லந்திநிறத்தானடியாரையந்தணரைநிந்தித்துரைத்த
னந்திநலமிக்குடையாரைப்பொல்லாரொன்றேநவின்றிடுதல். (௧௧)

மறையைவிற்றலிவைசெய்தோர்மறையோர்க்கொலைசெய்தவராவர்
முறையிலிவர்கள்கடுங்கும்பிபாகநரகமுயங்கியே
நிறையுந்துயரமநுபவித்துப்பின்புநிகழூர்ப்பன்றியாய்க்
குறைவினூறுயுகம்பிறந்துபவ்வீக்குழிவீழ்ந்துழிதருவார். (௧௨)

தத்தகுலம்புகமொன்றுதழுவுங்கணிகையனம்புசித்தோன்
சித்தமருண்டுமீனாயுஞ்செனித்துவலையன்கொலப்படுவா
னொத்தவினமல்லார்தமுணவுண்டோன்மதுபானியைநிகர்வான்
முத்தநிகர்பற்பரமாதர்முயக்கங்குருவின்முயக்கமே. (௧௩)

பூத்தகாலைமனையாளைப்புணர்ந்தானிரத்தகூபத்தில்
யாத்தநூறுயுகமழுந்தமிரியும்புலைச்சிமுலைதோய்ந்தான்
மூத்தவிருத்தயோனியிடைமுயங்கும்படிசுக்கிலங்கவிழ்த்தான்
சித்தகயினிமுலைதிளைத்தான்வலிந்துபரமாதரைச்சேர்ந்தான். (௧௪)

இன்னகொடியபாதகத்தோர்நாயூனுகறுறெடுத்தருந்திப்
பின்னமருவிக்காலொடுகைபெயர்க்கக்கூடாவிதங்கிடப்பார்
சொன்னவிரதத்துபவாசத்தோகையரைச்சேர்ந்தவனுப்புத்
தன்னநிறைகூபத்திலுகந்துளைந்துசெந்நாயாய்ப்பிறப்பான். (௧௫)

மறையாளருக்கொன்றீவேனென்றுரைத்துப்பின்னர்மறுத்துரைத்தோன்
குறையாவசிபத்திரவனத்தேகிடந்துகுரைநாயாய்ப்பிறப்பா
னிறையாம்பரமனடியார்வேதியராக்களுக்கூறிழைத்திட்டோன்
னிறையார்சூலவளற்றழுந்திவேடனாய்ப்பின்புழிதருவான். (௧௬)

நானம்பானந்தவமோமஞ்செபமற்றிவைகணலியூறு
மானவிழைத்தோனுற்பதனமருவியளவாத்துன்புற்றுப்
போனபின்னர்மூகையாய்வெதிராய்ப்புகலில்கொத்தையா
யீனமருவுமினும்பலவாய்த்தோன்றியந்தோவிழிதருவான். (௧௭)

நீதிநூல்சோதிட நூலேங்கமுங்கமுவாயுளைக்குநூல்
பேதியாததரணிநூலிவற்றைப்பேதித்திடுபாவி
யோதியுணராப்பிரமகாதகனென்றுளைப்பாருறுநரக
மோதியலேப்பத்தன்புற்றுப்பின்புகமுதையாய்முளைப்பான் (கஅ)

பொருள்பெற்றனமென்றிறுமாக்கும்புன்மையாளன்பொய்யுரைப்போ
னருளிற்பணித்தமந்தணத்தையாருமறியவெளிவிட்டோன்
மருளிற்றீர்ந்ததருமத்தைமதித்திடாதுநிந்தித்தோ
னிருளிற்பொலியும்பாடாண்டர்வேடமினிதென்றுறப்பூண்டோன். (கக)

இனையரிழிநாயூனருந்தியெரிவெந்நிரையத்துகமழுந்திப்
புனையலாகாவிழிபறவையாகிப்பின்னர்ப்போதருவார்
நினையமுடியாப்பயம்பொருத்துநீசர்கோளர்நிறைதருதீ
வினையர்கொடுமூத்திரபானமெய்திமிருகமாய்ப்பிறப்பார். (உ0)

பதிதரன்னஞ்சூதகங்கோட்பட்டோரன்னம்புசித்திடுவார்
முதிருஞ்சுடுபாறையிற்கிடந்துமுற்றிமூகையாய்ப்பிறப்பார்
விதியிற்புசிக்குங்காலத்துவிழைந்துபூத்தவளைநாயைப்
பொதியப்பார்த்தோர்பேசிடுவோர்பொல்லாநரகத்தழுந்திடுவார். (உக)

பிரமசரியமனுட்டிப்போர்பிறங்கிருள்ளிமல்லிமுதற்
பரவுபிறவுங்கவர்ந்திடுதல்பமுதாம்புசிக்குங்காலத்தில்
விரவப்பேசல்கோபித்தனகைத்தலிவையும்விரோதமாங்
கரவினுலோகஞ்சந்தாதிகனிகாய்முதற்றெவ்வலும்பமுதே. (உஉ)

தந்தைதாய்க்குத்திதிகொடான்றக்ககாலங்கிரியைசெயான்
றந்தைதாய்வார்த்தையைக்கடப்பான்றன்னில்பிழைதிரவுந்துறந்தோன்
றந்தைதாயர்பசித்திருக்கத்தானேயுண்பானன்றிகொன்முன்
றந்தைதாயர்முதுமையிடைத்தாங்கானினையர்பாதகரோ. (உங)

புத்தர்மனையுட்போனவனுமவர்சாத்திரமோர்புந்தியனு
மொத்தமறைநிந்தித்தவனுமுவக்குங்கொடையைத்தடுப்பானுஞ்
சுத்தமார்க்கம்விடுத்தானுமதிதிபூசைதொலைத்தானுஞ்
சத்தமகமைந்தாற்றுனுந்தாவாக்கொடும்பாதகராவார். (உச)

தேவாலயத்துமகச்சாலையிடத்துஞ்செந்தீயெதிரிடத்து
மோவாப்பசுக்கொட்டிலினிடத்துமுயர்பிப்பிலத்தினடியிடத்துந்
தாவாதுழுதபூமியினும்வன்மீகத்துநந்தனத்து
மாவார்தீர்த்தக்கரையினுமீரியக்கம்விடுத்தோர்களுமனையர். (உரு)

பருவர்திங்கட்பிறப்புவிதிபாதம்பகருமட்டமியே
மருவும்வைதிருதிசிறப்புவாய்ந்துவிளங்குஞ்சதுர்த்தசியே
பொருவில்விரதத்தினமிவற்றிற்பொருந்தமகளிர்முலேதோய்வார்
பெருகவிவைகண்டொருவரசர்பேசுமிவருமனையரோ. (உசா)

தம்மையெடுத்துப்புகழ்ந்திடுவோர்தம்போனினையாதன்னியரை
வெம்மையுறநிந்தித்திடுவோர்வேதாதிகள்சொல்லியகருமஞ்
செம்மையுறச்செய்யாதொழிப்போரொடுத்தவிரதஞ்செயாதுவிட்டோர்
மும்மைப்புவனங்களுமிழிக்கமுடிந்தவிவருமிவர்கண்டீர். (உஎ)

உரைத்தவிவர்மற்றிரவுரவமாதியொழியாநரகங்கள்
புரைத்தமனத்தராய்த்திளைத்தப்புவியின்மீட்டுப்பிறந்திடுங்கால்
வரைத்தகுருடுசெவிடுமுதன்மற்றுமுறுப்புக்குறையாகிக்
குரைத்தபுலைவாய்ஞாளியினுமிழிந்ததுயரக்கோட்படுவார். (உஅ)

கொடியபாவம்புரிநரொலாங்கொடியநரகெலாந்துளைந்து
கடியவிலங்குபறவைகளாய்ப்பிறந்துபிறந்துகழிந்ததற்பின்
முடியவுறுப்புக்குறையோராய்ப்பிறந்துபிறந்துமுடிந்திடுவார்
நெடியவுறுப்புக்குறைநீத்துநிலத்துமருவப்பிறந்தாலும். (உகூ)

பிறந்தபொழுதேகழிவாரும்பிறந்துசிலநாளிருந்துவனப்
புறந்தபொழுதேகழிவாருமொத்தவாயுளடைந்தாலு
நிறந்தவறுமையடைவாருமாகிநிலத்துத்துயருறுவார்
சிறந்தபிறப்புற்றென்பெற்றூரறிவிலாவிச்சித்தையரோ. (௩0)

வேறு.

வெருகுவதைத்தவன்பொற்கண்ணினன்கிளைகவர்ந்தவனில்விழியன்மாடு
கருகுறக்கொன்றவன்றலைநோய்காதுவலிவயிற்றுவலிகலந்துவாழ்வன்
வருகுலமாமறையோர்க்குக்கொடுப்பேனென்றுரைத்தீயான்வயிற்றுநோயன்
பெருகுபிதாவனைப்புணர்ச்சிசகியாதான்வெகிராகிப்பெருந்துன்பாழ்வான். (௩க)

கலையிழந்தமடவாரைப்பார்த்தவன்கண்ணோயாளன்மூலநோய
னுலைவில்பரமாதரிணைவிழைச்சுற்றோன்சுபகருமத்துறக்கொபித்தோ
னிலைகுலையுந்தாபசரத்தினன்புரிந்தவுபகாரநினைதல்செய்யா
னலைசெய்கபரோகமொடுசுவாசகாசமும்பிறவுமடைந்துசோர்வான். (௩உ)

புண்ணியநற்றலத்தனையகாலத்துத்தானங்கொள்புன்மையோனு
மண்ணியவபாத்திரத்தீந்தவனுமிரத்தமும்புழுவுமளையுமெய்யன்
றண்ணியமாநதிக்கரையின்வழியினீழலினிழிந்தசலம்விட்டோன்பா
ரெண்ணியசோலையழிருவனுணவுதடுத்தவனுமதேயெய்திச்சோர்வான். (௩௩)

மறையவர்தம்பொன்கவர்ந்தோன்பாண்டுநோயினனுற்றமகந்தொடங்கி
நிறையமுடியானங்நோயொடுதலைநோயும்பொருந்திநிலைமைதீர்வன்
முறையில்புலைச்சியைப்புணர்ந்தகயவனுமந்நோயடை வன்முடிக்கும்யாக
நிறைதராவிதமுறுபுரிகொடியோன்பெரும்பீசநிலவச்சோர்வான். ௩௪)

உத்தமசாதியின்மடவார்ப்புணர்ந்தவன்றன்றலைக்கொடும்புண்ணுடையன்வேத
வித்தகர்தம்மடவாரைப்புணர்ந்தவனுசியினழிபுண்மேவிச்சோர்வன்
சுத்தமிகுநற்கருமம்புரிகாற்கோழிகள்கரங்கடோன்றக்கண்டோன்
சித்தமயற்புகவிடுத்தோனிருவருமேற்சொல்லியதுசிவனுவாரோ. (௩௫)

தன்னுடைச்சாதியிற்பரமாதரைப்புணர்ந்தோன்மார்பிடைப்புண்டங்கச்சோர்வன்
மன்னுடைத்தன்றந்தையுடன்பிறந்தாட்சேர்ந்தவன்வலப்பான்மருப்புளன்
மின்னுடைப்பல்பூக்கனிகாயாதிகளையபகரித்தோன்விரற்புண்ணுளன்
றென்னுடையபிறர்புண்ணிலுபத்திரஞ்செய்தோனரப்புச்சிலந்தியாளன். (௩௬)

குளங்கவர்ந்தோன்கண்டமாலையன்புலைவீதியிற்புசித்தகொடியன்பித்த
முளங்கவலப்பெறுந்தலைவற்கியற்றியபாதகன்வாதமுறுநோயாளன்
விளங்குருப்பகைத்தவனுமதுமேவும்விளங்குபக்கபாதமேயோன்
களங்குலவுமந்நோயனியாதுபுசித்தவன்விக்கலைச்சார்வானே. (௩எ)

நித்தியகன்மம்புரியான்கபநோயன்மறையோர்கணிலவிமேவுஞ்
சுத்தியநன்மனையமைக்கவொட்டாதான்காக்கைவலிதொலையாதெய்துங்
கத்தியநாய்பூனைதொடுமனம்புசித்தோன்வாய்நாற்றங்கலந்துசோரு
மெந்தியபொய்ச்சான்றுரைத்தோனதனெடுபித்தமுங்கலப்பவெருவிச்சோர்வான்.

குறிமதுவுண்டவன்றேய்ந்தபல்லினன்குக்குடம்வதைத்தோன்கோணன்மூக்க
னெறிதபமற்றோர்புணர்ச்சிநோக்கினவனேத்திரநோய்நிரம்பிச்சோர்வ
னறிதரவாலயங்குளத்திலிருக்குமரம்வெட்டினவனந்தனுவ
னெறிதருபிரோதசிராத்தம்புசித்தோன்கிருமிகள்வாயியையத்தேம்பும். (௩௯)

கன்னிகையைப்புணர்ந்தவன்பற்பலநோயனதிசாரன்காடுசுட்டோன்
மின்னியபால்கவர்ந்தவனீரழிவுடையான்கருச்சிதைத்தவெய்யபாவி
துன்னியவெந்தொழுநோயன்குதிரைவதைத்தவன்கோணல்சூழ்ந்தகாதன்
பன்னியபல்லோர்நடக்கும்வழியின்முள்ளிட்டோனொழியாப்பாதநோயன். (௪௦)

வழியிடைத்தன்மனையாளைப்புணர்ந்தவன்றன்குறிப்புற்றுமருவிச்சோர்வன்
பொழிசுவைப்பாற்பசுக்கொன்றோன்குட்டநோயினனயலார்புதல்வற்கொன்றோ
னிழிபுதகமகவிலாதவனுவனுடுத்தகலையெனுதுதெவ்வும்
பழியுடையோனிளம்பருவத்தேதலையெலாநரைக்கப்பட்டுச்சோர்வன். (௪௧)

அரவுவதைத்தவன்விடபாண்டடைகுவன்றன்மகட்புணர்ந்தோனழியாக்குட்டி
பரவுமறையாகமபுத்தகந்தாண்டினோன்முடநோய்ப்பட்டுச்சோர்வன்
விரவுசுவைவிளக்கம்வௌவினோன்கோட்டான்மணந்தடுத்தமேன்மையில்லா
னுரவுதடுபங்கமுறும்புத்தகங்கள்வௌவினவனூமையாவன். (௪௨)

இத்தனைமாபாதகமுமிரித்திடுதற்காங்கழுவாயியம்புங்காலை
முத்தனையானனையபரமசிவன்பூசையன்றிமொழிவதில்லை
யெத்தனைநாண்முயன்றாலுமதுபோலப்பயன்படுவதில்லையாலந்தச்
சுத்தனையாதரித்தன்பிற்போற்றுதற்கும்விசேடதலந்துறைதல்வேண்டும். (௪௩)

காசிகுருக்கேத்திரஞ்சீபருப்பதமனேகதங்காவதமெஞ்ஞான்றும்
வாசிபடுகேதாரஞ்சோமநாதம்புகழேவளர்கோகன்னம்
பேசிமுடியாவொளியிந்திரநீலப்பருப்பதம்விண்பிறங்குவெய்யோன்
கூசியகன்மணிமாடவிருபாக்கங்கேதிசங்கோணவோங்கல். (௪௪)

ஓங்குதிருக்காளத்திதிருக்காஞ்சிகழுக்குன்றமொற்றியூர்நீர்
தேங்குதடமலிபாசூர்திருவாலங்காடுபுகழ்திருவேற்காடு
நீங்குதலில்வெண்பாக்கந்திருமுல்லைவாயிலெழினிலவுகச்சூர்
பாங்குபுனையிடைச்சுரமச்சிறுபாக்கமரசிலிவன்பனங்காட்டூர். (௪௫)

கோவலூர்வீரட்டந்திருவண்ணாமலையதிகைக்குலவீரட்ட
நாவலூர்திருத்துறையூரிடையாறுமுண்டீசநலக்கண்டீசங்
காவலூர்மதிற்றிருப்பாதிரிப்புலியூர்வெண்ணெய்நல்லூர்கவினார்சோலை
மேவலூர்விருத்தகிரிதூங்கானைமாடமொளிமிளிர்நெல்வெண்ணெய். (௪௬)

அவிநாசிதிருப்பாண்டிக்கொடுமுடியானிலைக்கோயிலமையநாளும்
புவிசேருங்கருவூர்வண்டிருவஞ்சைக்களம்பரமன்பொலியும்பேரூர்
கவிகூரம்பொழிலுடுத்ததிருமுருகன்பூண்டிமணங்கமழ்நனுவு
தவியாகவடைந்தார்க்குவானவர்கள்சூழ்தருவெஞ்சமாக்கூடல்லே. (௪௭)

தில்லைமயேந்திரப்பள்ளிசாய்க்காடுவெண்காடுதிருச்சங்காடு
முல்லையுயர்கழிப்பாலைகுருகாவூர்சீகாழிமுதிர்கோலக்கா
வெல்லையிலாவளப்புன்கூரிலகோமாம்புலியூர்புள்ளிருக்குவேளூர்
தொல்லைவினைமுழுதொழிக்குங்குறுக்கைவிளத்தொட்டிநலந்தோயுமாற்றூர். ௪௮

மன்னியவாளொளிபுற்றூரானைக்காபராய்த்துறைவான்மருவுமீங்கோய்
துன்னியவாட்போக்கிசிராமலைபஞ்சநதஞ்சோற்றுத்துறைகோமுத்தி
மின்னியநள்ளாறுமறைக்காடுவாஞ்சியமாரூர்வீழிமேலோ
ருன்னியவாலங்குடிகோட்டூர்நெல்லிக்காப்பனந்தாளுறுமாப்பாடி. (௪௯)

இடைமருதகுடந்தைதிருவாலவாய்சேதுவிராமீசங்கானை
யடைகொடுங்குன்றுப்பனூர்திருப்புத்தூர்திருச்சுழியலமராடானை
கடையில்பெருந்துறைநெல்லைகுற்றாலங்காயாரோகணங்கோட்டாறு
மிடைதருபல்வளம்பொலியுமித்தலங்களெவற்றுள்ளும்விசேடமாமால். (௫௰)

இன்னதலங்களுக்கதிகங்கவுரிமாயூரமறையெடுத்துக்கூறு
மன்னதலத்தெல்லையளவோசனையொன்றுஞ்சுற்றுமதற்குமேலாச்
சொன்னதலமெந்தகையபுவனத்துமில்லையிதுதனியேயின்னு
மென்னதலங்களுமதற்குத்தாழ்ந்ததலமல்லாமலிணையாகாவே. (௫௧)

இந்தகையகவுரிமாயூரம்விளங்குதறெரியாரிலங்குதீப
மொத்தகையிலிருப்பவுமோர்பாழ்ங்குழியில்வீழ்ந்துழலுமுணர்விலார்போற்
பித்தகையும்பிறப்புற்றுமெஞ்ஞான்றுந்தீராதபிணிக்கோட்பட்டு
மத்தகையவரிறுழன்றுமிறந்துநரகத்தழுந்திவருந்துவாரால். (௫௨)

மன்றுபுகழ்ப்பெருங்கவுரிமாயூரத்தலத்தெல்லைவணங்கிச்செய்யு
முன்றுபிரதக்கணமொன்றாற்சுவர்க்கமுறுமிரண்டாலும்பர்வாழ்த்த
மன்றுமகபதியுலகமுறுமூன்றான்மலர்மேலான்வைப்புமேவு
மின்றுமொருநான்கனாற்சுதரிசனப்படைக்கடவுளிருக்கைமேவும். (௫௩)

நல்லதவம்பொலியைந்தாலெவ்விடத்துஞ்சஞ்சரிக்குநலமுண்டாகும்
வல்லபுகழிருமூன்றால்வடதிசைக்கோமகனுறும்வாழ்க்கைமேவும்
வெல்லவுயர்திறலேழால்வெற்றிவேற்படையாளிவியன்வைப்பெய்து
மல்லறவிரிருநான்காலங்குசபாசத்தனுலகமையமேவும். (௫௪)

ஒன்பதனாற்பராசத்தியுலகமுறுங்கயிலாயமுறுமோர்பத்தா
லின்பமிகுபன்னொன்றாற்சிவலோகசாலோகமெய்தாநிற்கு
மன்புமிகுபன்னிரண்டாற்சாமீபம்பதின்மூன்றாலரன்சாரூபம்
வன்புதவிர்பதினான்காலடிக்கலப்பாம்பதினைந்தான்வரன்மற்றின்றே. (௫௫)

பிரதமையின்மாயூரத்தலஞ்சூழிற்பாவமெலாம்பெயர்ந்துநீங்கும்
வரமுதவுந்துதியையில்வான்சுவர்க்கமுறுந்திரிதியையில்வானவேந்தன்
பரவுபதமுறுஞ்சதுர்த்தியிற்பிரமபதமாம்பஞ்சமியினெல்லா
வரவுலகங்களுமாளுமரசாகுஞ்சட்டியினாமொழியாவின்பம். (௫௬)

சத்தமியிவிட்டமெலாமுறுமட்டமியிற்கணத்தின்றலைமையெய்து
மொத்தநவமியிற்பிரமபதமெய்துந்தசமியின்மாலுறையுண்மேவும்
வித்தகவேகாதசியிற்கயிலையுறுந்துவாதசிமுன்விளம்புநான்கிற்
சித்தமமைசிவலோகசாலோகமுதனான்குஞ்செறியுமன்றே. (௫௭)

வேறுமொருதலத்துளுற்றுமேருவிகரறங்கொடுக்குமேன்மைநீமை
யீறுபடுமாயூரத்தனுவளவேசெய்யினஃதெளிதினியும்
வேறுமொருதலத்திலக்கமறையவருக்கனமூட்டவிளையிலாப
மீறுபடாமாயூரத்தொருபுலையற்கொருபிடிசோறிட்டாலுண்டாம். (ருஅ)

மற்றொருமாதலத்திடையாயிரவருடம்வசித்தலினுல்வருமிலாபம்
பற்றொருவாமாயூரத்தலத்திலொருகணம்வசிக்கிற்பண்பிளுகு
மற்றொருமாதலத்திடைக்கால்வருந்தநடந்தடைபேறுவானநாடர்
பற்றொருவாமாயூரத்திருந்தவிடத்திருந்ததனுற்பண்பிளுமே. (ருகூ)

ஏனையமாதலங்களிற்சென்றரியவுபவாசஞ்செய்தெய்தும்பேறு
மாநயமார்தருகவுரிமாயூரப்பெருந்தலத்தின்மகிழ்ச்சிபொங்க
பானயமார்நெய்முதலாப்பல்சுவையமடையுடம்புபருக்கவுண்டு
தூநயமார்மடவார்தங்குழாத்தொடிருந்தாலுமெய்தறுணிபாமன்றே. (சு0)

வேறு.

கவுரிமாயூரத்தெல்லைகாதலிற்சூழுவோரை
யுவரிசூழ்புவியோர்சூழ்வாரொன்றுரைத்திடுதலென்னே
தவலிலாமலரின்மேயசதுமுகனுதிவானோ
ரவரையேபரமனுகவவாய்த்தினஞ்சூழ்வாரொன்னில். (சுக)

கண்ணுதலினிதுமேயகவுரிமாயூரத்தெல்லை
நண்ணுதல்செய்தபுல்லுநகுகொடிதருவுமற்று
மெண்ணுதலியற்றவீற்றிற்சிவலோகமெய்துமென்னி
லொண்ணுதலதனையன்றிமற்றொன்றையுன்னலாமோ. (சுஉ)

உறுவழிச்செலவினேனுமுற்றவாணிகத்தினேனுந்
தெறுவிழிப்பரத்தைமாரைச்சேருமோர்விழைவினேனு
மறுவின்மற்றொருவனட்புமதித்தேனுமெவ்வாற்றேனு
குறுகுதலருமாயூரஞ்சார்வதுகுணமாம்யார்க்கும். (சுங)

தவலருங்காசியாதித்தலங்களில்வசிக்குநல்லோர்
கவலருந்தாங்களின்றகான்முளையாதியோர்க்கு
நுவலருமாயூரப்பேர்நுவன்றுபல்காலழைப்பா
ரொவலருமிப்பேரொன்றேயேற்றமந்திரமாமென்பார். (சுச)

பலபலவுரைப்பதென்னைபகர்பெருமாயூரத்தி
னலகறுகுளங்களெல்லாமற்புதத்தீர்த்தமாகும்
மலமகல்சிலைகளெல்லாஞ்சிவலிங்கவடிவமாகும்
புலமுறவசித்தோரெல்லாங்கயிலையிற்பொருந்துவோரே. (சுரு)

புண்ணியமாயூரத்திற்பொலிதரவருவோரெல்லா
நண்ணியவிடங்கொடுத்துநயந்தவர்க்குணவுமூட்டி
யண்ணியபிணிமுன்னுயவறமருந்தாதிநல்குந்
திண்ணியரடையும்பேற்றையானேயோதெரிந்துசொல்வேன். (சுசு)

மறைமுதலடியராயமறையவராதியோர்க்குக்
குறைவிலாவிருக்கைநல்கியன்னமுங்கொடுப்பாரொன்னின்
மிறையிலாவவர்தம்பேற்றைவெண்ணிலாவணிந்தவேணி
யிறைவனேயுரைப்பானன்றியெவரறிந்துரைக்கவல்லார். (சுஎ)

வளமலிசிறப்புவாய்ந்தமாயூரதலத்தைமேவி
யுளநெகிழ்ந்தாவசித்தலுறவலஞ்சூழ்தலின்றும்
பளகறுதானமாதிபண்ணுதலின்வல்லாற்குத்
தளர்வுபட்டொழியுமெப்பாதகங்களுஞ்சலித்துமாதோ. (கூஅ)

பாதகம்புரிந்தோர்யாரும்படுபெருந்துன்பந்தீர்ப்பான்
மேதகவுறுமாயூரமேவிமுன்சொன்னவாறே
மாதகவியற்றிவாழ்வார்மற்றிதனக்குமேலாப்
போதருங்கழுவாயில்லைபோற்றுமினுண்மையீதே. (கூகூ)

பழிபடுநரகம்பற்றார்கூற்றின்வெஞ்சினமும்பாரா
ரிழிபடுபிறவியெய்தாருறுப்பிலாதிழிதலெய்தா
ரொழிவரும்வறுமையெய்தாருவக்குமாயூரஞ்சார்ந்து
வழிபடறானமாதிவயக்குதலாற்றுவோரே. (எ௦)

பெண்மையோர்பாதியாகிப்பிறங்குமாதேவனாணை
யுண்மையேயுரைத்தேனிம்மாயூரத்திற்கொப்பொன்றில்லை
வண்மையினதனைச்சார்ந்துவலஞ்செயலாதிபோலோர்
திண்மைசெய்கழுவாயில்லைதேர்தருணர்வுமிக்கீர். (எக)

தலவிசேடப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் அஅரு.

# கவுண்டின்னியப்படலம்.

போற்றவருங்கங்கையெனும்புண்ணியமாநதிக்கரையிற்
சாற்றவருமந்தணர்கடவாச்சேரியிடைவாழ்வான்
றேற்றவருமறையொழுக்கந்திறம்பாததிருமனத்தா
னேற்றவருநலத்தகவுண்டின்னியனென்பானொருவன். (க)

அந்தமுனியோமவிறகத்தனையுமொடிப்பதற்குக்
கந்தமிகுமலர்துவன்றிக்காய்கனிகள்பலமல்கி
முந்தவெழுகொடுமிருகமொய்சிறைப்புள்ளிவைமொய்த்துச்
சந்தமுறமருவுமொருதவாவனத்தைத்தலைப்பட்டான். (உ)

அரசமுதற்பல்விறகுமாங்காங்குக்கவர்தருகாற்
புரசமுதற்பலதருவும்பொருந்தியிடையவ்வனத்துள்
விரசமொருபாழ்ங்கிணறுமேவியதாயிடைநின்றும்
வரசகுணனவன்கேட்பமருநகூவொலியெழுந்த. (ங)

செவிசுடுகூகூவொலியின்றிறமின்னதெனத்தெரியா
னவியமரர்க்குதவுமுனியஃதுணர்வானருகெய்தச்
சவிமறையோயிதுகேட்டிதவாப்பெருநின்குலப்பிதிர்யாங்
குவிபெரும்பாதகமியற்றிக்கொடுநரகுகொளப்பட்டேம். (ச)

ஏலாததானங்களேற்றனமிம்மித்துணையு
மாலாதபெரியோர்க்குவாஞ்சித்துக்கொடுத்ததிலேங்
காலாதமறையொழுக்கங்கைவிட்டேஞ்சிவநாமங்
கோலாதநாவுடையேங்கொடுநரகுகொளப்பட்டேம். (ரு)

எங்கள்குலத்தொருவனீயருமருந்தினிருக்கின்றாய்
கங்களொருநான்குடையான்முதற்றேவர்கைகுவிக்குந்
திங்கண்முடிப்பெருமான்வாழ்திருத்தலமொன்றனையணுகி
யங்கள்பெரும்புண்ணியத்தாலடியறுத்துக்கதியுய்ப்பாய். (௬)

திரைபொருகங்கையின்முழுகுதிகழ்கயையிற்சிராத்தஞ்செய்
தரைபுகழப்படுமன்னதானம்பூதானமுல
குரைகிருகதானங்கோதானமுயர்பொற்றானம்
வரைவறச்செயாங்களெல்லாமாண்கதியிற்புகல்வேண்டில். (௭)

குணமுருவங்குலம்வாய்ந்தகுமரனொருவனுக்கின்ற
மணமலியுங்குழன்மகளைவளவியதானங்கொடுத்தா
லணவியவன்பிரமபதமடைவன்மகளில்லாதான்
றணவரியபொருள்கொடுப்பினப்பதமேசார்தருவான். (௮)

அகவையிருநான்குடையாள்கன்னிகையஃதொன்பதுளா
டகவமையுமுரோகணியோர்பத்துடையாடான்கவுரி
நகவதன்மேலாண்மலினையவளையுடைநயவாத
மகளையளித்தவனேற்றோனொடுநரகின்வசித்திடுவான். (௯)

ஆதலாற்றக்கபடியறிந்துதானங்கொடுத்தி
யீதலாலிவகையவெச்சமுநன்காற்றிடுதி
காதலாற்சிவநிசியிற்கருதுவிரதமும்புரிதி
யோதலாற்பொலிபெருமாணுமங்களுரைத்திடுதி. (௧௦)

இன்னுமறையியம்புவனவெல்லாநீயாற்றுவையேற்
றுன்னுநரகத்தழுந்தருலைந்தியர்ங்கதியுறுவோ
மன்னுமிதுசெய்யாயேன்மற்றெமக்கோர்கதியில்லை
பொன்னுங்கராவருமைப்புதல்வவெனப்பிதிரர்சொற்றார். (௧௧)

சொற்றமொழியனைத்துமுளத்துயர்மூளச்செவியேற்றுக்
கொற்றமுறுபுகழ்வாய்ந்தகுண்டினகோத்திரத்துதித்தா
னற்றமுறுமிவர்துன்பமகற்றுவேனெனத்துணிந்து
பொற்றமனையகம்புகுந்துபுந்தியுறவிதுசூழ்வான். (௧௨)

எத்தலநம்மெண்ணமெலாங்கைகூடவெளிதருளு
மெத்தலநம்மெண்ணத்துமேலாகவினிதருளு
மெத்தலமெண்ணியதுவிரைந்தெய்திடப்பேரருள்சுரக்கு
மெத்தலநாமெய்துதலென்றெண்ணிமனமுழிதருவான். (௧௩)

காசிமுதலகலிடத்துக்கணக்கில்லாத்தலமுள்ள
வாசியுளதிதுவென்றுதுணிந்திலேமற்றிதனைப்
பேசிவரையறுத்திதுவென்றுரைப்பார்யார்பெருந்துயரம்
வீசியவ்வின்பமுறவிளைத்திடலென்றெனக்கவல்வான். (௧௪)

அப்போதுசிவபெருமானருள்போலவழலினுந்தீ
வெப்போதுநரகுழப்பார்முன்புரிநல்வினைபோல
முப்போதுஞ்சிவனடியேமுன்னுபுகாலங்கழிக்குந்
தப்போதுதராவீணைமுனியாங்குச்சார்ந்தனனால். (௧௫)

அந்தமுனிவனைவணங்கியான்றசவுண்டின்னியனுஞ்
சந்தமுனிபிதிரர்நரகுழப்பதவுஞ்சாற்றியது
முந்தவவர்துயரனைத்துமுருக்குவதற்குன்னியதுஞ்
சிந்தவிலாவகையெடுத்துச்செப்பினனவனுரைப்பான். (௧௬)

வேறொன்றுகருதாதுமினிர்கவுரிமாயூரப்
பேறொன்றுதலத்தடைநிபிரானெறிரோர்தீர்த்தமுள
தாறொன்றுசடையானுமதன்பெருமைசொலமாட்டா
வீறொன்றுமதின்மூழ்கினெப்பெரியபாதகமும். (௧௭)

அன்னதிருப்புனலாடியத்தலத்தோர்நாள்வசித்தி
முன்னவனைத்தரிசித்திமுப்பொழுதுமிதுசெய்யி
னென்னபெரும்பாதகமுமிரிந்தவர்மேல்விடுவார்
சொன்னபடிசெய்யென்றுன்றுணிந்தனன்மற்றம்முனியும். (௧௮)

மற்றவனைவிடைகொண்டுமாயூரத்தலம்புகுந்து
சொற்றபடிவள்ளலார்திருமுன்னர்ப்புனறோய்ந்து
பற்றமையவொருபொழுதுபட்டினியுற்றுங்கமர்ந்தான்
முற்றவுணரனையாளைமுப்பொழுதுங்கைதொழுது. (௧௯)

இந்தவிதமிவனொருநாளிருக்கநெடுநரகுழக்கும்
பந்தமிகுபிதிரரெலாமத்துன்பம்படநூறிச்
சந்தமிகுசிவலோகத்தடைகின்றார்தாமுவக்க
வந்தமகன்றனைக்கண்டார்மாயூரத்திதுசொல்வார். (௨௦)

இத்தலத்துநீயியற்றுமிருந்தவத்தாலிடர்நீங்கிக்
கைத்தலத்தாமலகமெனக்கதிகண்டோம்புண்ணியங்க
ளெத்தலத்துமிதுபோலவியைப்பதுவேறில்லையினி
முத்தலத்தும்புகழ்பரம்பவாழிநீயெனமொழிந்து. (௨௧)

கண்காணவவர்சென்றுசிவலோகங்கைக்கொண்டார்
பண்காணவிசைமுனிவன்பகர்ந்தமொழிகனிவியந்து
மண்காணத்தவம்புரிந்தமாமுனிவனத்தலத்தே
தன்காணப்பெருமகிழ்வுதலைக்கொண்டுவீற்றிருந்தான். (௨௨)

முன்பிதிருரைத்தபடிமொழிபலதானமுங்கொடுத்தா
னன்புசெறிசிவரிசிமுன்னுயவிரதமுமுடித்தான்
றுன்புதன்பேருரைப்பார்க்குமில்லையெனவுலகுசொல
வன்புதவத்துறங்கொண்டமுனிபன்னாளவண்வசித்தான். (௨௩)

ஒருதினஞ்செய்திடுதவத்தாலுறுபிதிரரளவொருவிக்
கருதியதின்மேலாயகதியுற்றொளிர்கோடு
பொருதிரைநீருலகிடையத்தலம்போலுமொன்றுளதோ
சுருதியுணர்முனிவனுந்தன்றொன்னகர்ப்போய்வாழ்ந்திருந்தான். (௨௪)

கவுண்டின்னியப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯௦௧.

# யோகவித்தமப்படலம்.

கரைபொருதிரைவிருத்தகங்கையந்தீரத்துள்ளான்
விரைகெழுபனவன்யோகவித்தமனென்னும்பேரான்
றரைபுகழனையானில்லாள்சண்டியென்றுரைக்கும்பேராள்
புரைதபுமனையார்க்குள்ளபுத்திரர்பல்லோர்மன்னோ. (க)

சாதுவாமறையோனேனுமுன்செய்தீவினைச்சார்பாலே
தீதுசான்மிடிக்கோட்பட்டுச்செறிதருபுதல்வராலு
மோதுநற்குணமொன்றில்லாச்சண்டியென்றுரைப்பாளாலு
மோதுமாதுயரமுற்றுன்மிடியுறின்முளைப்பதென்னே. (உ)

மாதவமுயன்றுசெய்துவறுமையைமுருக்குவேனென்
றூதரமுளத்துமல்கவருந்தவமுயலுங்கால
மேதகுவானநாடர்விரிஞ்சனுக்குரைத்தாரந்தப்
போதன்வந்தெதிரோகின்றுன்பொருக்கெனத்தவனுணர்ந்தான். (ந)

எழுந்தடிபணிந்துநின்றவிருபிறப்பாளற்பாராச்
செழுந்தவயாதுவேண்டுஞ்செப்புதிதருதுமென்றுன்
விழுந்தெழுந்தையயானேவறுமையான்மெலிவுபூண்டே
னழுந்துமத்துயரநீங்கத்திருவநன்களித்தியென்றுன். (ச)

பிரமனுமுறுவல்செய்துபெருந்திருவளித்தோமந்த
வரமிகுதிருவையார்க்கும்வழங்கிவாழென்றுபோனுன்
கரவறுமறையோன்பின்னர்க்களிப்புறுமனந்தனாகிப்
பரவுதன்னிருக்கைபுக்கான்பாலராதியருமொய்த்தார். (ரு)

யாவருந்திருவம்பெற்றதறிதரவெடுத்துக்கூறித்
தாவருமறையோன்வாழ்நாட்டடங்கொள்கோதாவரிப்பான்
மேவரும்விருப்பினோடுமேவினன்றீர்த்தமாட
வோவருங்கரையுட்பக்கமிடிந்தாற்றினுறவீழ்ந்தன்றே. (சு)

உள்ளுறவிழுதலோடுமோரொலியெழுந்ததாங்கு
ளள்ளுறவிதுவென்னென்றுதெரிதரநடந்தானைய
னெள்ளுறவில்லாச்செம்பொன்வரையெதிர்ப்பட்டாற்போலத்
தள்ளுறமுடியாச்செம்பொன்லவப்பெதிர்தயங்கக்கண்டான். (எ)

காண்டலுமகிழ்ச்சிபூண்டாங்கிருந்தவையாவுங்கைக்கொண்
டாண்டதன்மனையினுய்த்தானதுகனவினுங்காணுத
நீண்டபல்புதல்வரோடுசண்டியுமிரம்புமோகை
பூண்டனண்மறையோன்றன்னைப்புல்லுபுதுதித்தாளன்றே. (அ)

மறிவருஞ்செல்வம்பெற்றமறையவன்வருவார்யார்க்கு
முறிவருமன்னநல்கிவேட்டனமுகந்துவீசி
யறிவருந்தருமமெல்லாமாற்றுதற்குள்ளங்கொண்டான்
பிறிவருஞ்சண்டியென்பாளஃதுளம்பேணாளாள். (கூ)

புதல்வருமனையராகமறையவன்மனம்புழுங்கி
முதலவனருளாலிந்தமுகப்பருஞ்செல்வம்பெற்றே
மிதமுறநடவேமென்னிலென்பயனிதனாலென்று
கதமுறும்வெயர்வின்மூழ்குங்கலங்கிமூர்ச்சித்துவீழும். (க௦)

அடியொருபதினுன்குள்ளதாமெழுமுழக்கோலாலே
நெடிதளந்திட்டவொன்பானுயிரங்குழிநிலந்தா
னெடிவில்கோகன்னமென்னும்பெயர்பெறுமுதானஞ்செய்
படியறுபலத்தினுலேபண்புறக்கொடுத்தமேலோன். (கக)

ஒத்தவர்நிலநெருக்கமுற்றுறவமைந்தபைங்கூ
ழெத்தனையுள்ளவாகுமத்தனையாண்டுமேட்டும்
புத்தமுதயிலும்வாழ்க்கைப்புலவர்வாழ்சுவர்க்கமேவி
வித்தகமருவிவாழ்வன்வேறினியுரைப்பதென்னே. (கஉ)

பயன்படுகல்வியில்லான்பிணிதவிர்சரீரம்பற்று
ளயந்தருகுணச்சாதுக்கணட்புறுன்சொற்றவார்த்தை
வியந்துகொண்மனைவிமைந்தர்மேவுறுனிவன்மண்மேலா
லியங்குபுதிரிவானேனும்பிரேதமென்றிசைக்கலாமால். (கா)

வருவிருந்தூட்டலின்றேன்மனையறமென்பதென்னும்
பொருவருமறையோராதிப்புண்ணியரடைந்தாரொன்வில்
வெருவருமுள்ளத்தோடுமிக்கவமானஞ்செய்வா
னொருவருஞ்சண்டியாமித்தீயனையொழிவதென்றியாம். (கச)

தகுகுணந்தவிரில்லானைச்சார்ந்துலகுள்ளோர்யாரு
நகுமுகத்தினரோயாகநயந்துவாழ்வதினுஞ்சிவ
னுகுதிறமெதனுலேனுமுடம்பினையொறுத்தனன்றுஞ்
செகுதிறற்றுன்பம்யாவுஞ்சேராதன்மரணமென்றே. (கரு)

மறைமுதலன்புபூண்டமறையவராதியோரை
பொறையறவவமானஞ்செய்பொல்லாங்குவறிதுபோமோ
கறையறுமறையோர்தம்மைமதித்திடாக்கயமையாலே
நிறைதிருப்பெற்றும்பாம்பாய்நெடுநிலநகுடன்வீழ்ந்தான். (கசு)

என்றிவைபலவுமெண்ணியினிச்செயல்யாதுமில்லை
நன்றியின்மனைவிமக்களொடுநயந்திருக்குங்காறுந்
துன்றியநரகேயன்றிச்சுவர்க்கமென்பதுதானுண்டோ
வொன்றியென்றுயிருக்காயவுறுதியேசெய்வேனென்று. (களு)

மனைமகார்முதலியோரைத்தரும்பெனமதித்துப்போக்கிப்
புனைபொருள்வேண்டுமாறுபொருந்துதன்கையிற்கொண்டு
கனைகுரலெழுவிருத்தகன்கையந்திரநீந்தித்
துனைதரவவாசிநோக்கிநடந்தனன்றூய்மைவாய்ந்தான். (கஅ)

சாத்திரமுறையேபற்பருனமுங்கொடுப்போமென்னிற்
பாத்திரமாவார்முக்கட்பரனடிக்கன்புபூண்டார்
மாத்திரம்பொலியவர்க்குமாத்தலத்துதவனன்றிக்
கேத்திரஞ்சிறந்ததென்றெக்கிளர்ச்சிகொண்டுணர்வேனென்று. (ககூ)

ஆய்தருமுளத்தனுயபதிகளுக்காகாயத்தே
தோய்தருதிருவாக்கொன்றுசுந்தரமாயூரத்தி
னேய்தரவடைதியெல்லாமெண்ணியபடிசெயென்ற
தோய்தராவுவகையுற்றுன்யோகவித்தமனென்பானே. (உ௦)

முன்னருஞ்சிறந்ததென்றுமொழிதாக்கேட்டதுண்டு
பின்னருமருள்வாக்கஃதேபேசிடிற்பேசலென்னே
நன்னரும்பாைமுன்னுேனர்நயப்பதத்தலமொன்றேயென்
றென்னரும்புகழுர்அயோனெய்திருனெருமாயூரம். (உக)

மன்னுமாயூரத்தெய்திவள்ளலார்திருமுன்னுகத்
துன்னுமாதீர்த்தத்தாடிச்சுந்தரநீறுபூசிப்
பன்னுமாமறையோர்முக்கட்பரனடிக்கமலமென்று
முன்னுமாதவத்துமற்ருேர்முகந்திடத்தானமீவான். (உஉ)

பூதானஞ்சிலர்க்குச்செய்தான்புவிற்றிளங்கன்றினேடு
கோதானஞ்சிலர்க்குச்செய்தான்குளிர்மணஞ்செய்வான்செம்பொன்
மாதானஞ்சிலர்க்குச்செய்தான்வசித்திடுகிரகமென்று
மீதானஞ்சிலர்க்குச்செய்தான்மற்றவும்விருப்பிற்செய்தான். (உங)

இவ்வகைத்தானமெல்லாமியல்புறச்செய்தபின்ன
ரவ்வியமவித்தசிந்தையந்தணன்மாயூரேசன்
செவ்வியமலர்த்தாள்போற்றித்தெரிசனஞ்செய்யப்புக்கான்
வெவ்வியபாவம்போக்குங்கோபுரமேயவாயில். (உச)

மன்னியவங்குத்தாழ்ந்துவளம்பொலிகோயில்புக்குத்
துன்னியவனப்புவாய்ப்பச்சூழ்ந்துபின்திருமுன்புக்குப்
பன்னியவள்ளலாரைத்தரிசித்தான்பரிவுதீர்ந்தா
னன்னியமில்லாத்தேவியஞ்சனுயகிமுன்சென்ருன். (உரு)

உருகிநெஞ்சுடையமேனியுரோமங்கள்சிலிர்ப்பவின்பம்
பெருகிநாக்குழறவெல்லாம்பெற்றவட்காணப்பெற்ருன்
றிருகியலாதசிந்தைத்திருமறைமுனிவன்பின்ன
ரருகியலாதவாங்குவசித்திடுமாசைபூண்டான். (உசு)

இன்னணம்பன்னுண்மேவியெம்பிரான்மாயூரேசன்
றன்னருள்விரவியின்பமுத்தியிற்றலைப்பட்டுய்ந்தா
னன்னவன்மாயூரத்தினறஞ்செய்துவசித்தவாற்ருற்
சொன்னபன்மகாருமில்லுஞ்சுவர்க்கத்துவாழ்க்கைபெற்ருர். (உஎ)

யோகவித்தமப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஙசு.

---

## சுசன்மப்படலம்.

---

பாயநான்மறைப்பரப்புணர்ந்தவ, ணயமாமகமனைத்துமாற்றினன்
காயவானவர்களிக்கவாழ்தரு, தூயவேதியன்சுசன்மனென்பவன். (க)

சத்தவேதமுற்சகலநூல்களு, மொத்ததாமெனவுணர்விற்றெள்ளியு
நித்தமாதிப்பல்வினைவிரப்பியுஞ், சித்தசுத்தியோர்சிறிதுமுற்றிலான். (உ)

இனியியற்றுவதென்னையென்றுபூங், கனிவிராவியகற்பநிழல்வாழ்
புனிதவேந்தனைப்புந்திசெய்தனன், றனியனுயவன்முன்புச்சார்ந்தனன். (ங)

எனையவாவியதென்னையென்றலு, மனையனுய்பலகருமமாற்றியுந்
தினையோர்பாதியுஞ்சித்தசுத்தியைப், புனையவெய்திலேன்புலந்துமாழ்கினேன். ()

செம்மைமேவியசித்தசுத்தியை, யிம்மையேயினிதெய்தியுய்ந்திட
மும்மைமாமதமுழக்கருதவெண், கொம்மையானையாய்கூறுகென்றனன். (ரு)

என்றபோதவனிதயத்துள்ளுற, வென்றமால்விடைவிமலனைக்கொளா
வொன்றயாமெவனுரைசெய்வாமெனத், துன்றவோதியாற்சூழ்ந்துகூறுவான். ()

பாரவாவமேம்பட்டகவுரிமா, பூரமென்பதோருத்தமத்தல
மாரமான்மியமளவிலாதது, நேரயாவருநினைத்ததிவது. (எ)

எஞ்சமேவியகடவுளுன்முகன், றஞ்சமேயெனச்சார்ந்துபோற்றிட
நெஞ்சம்வேட்டதோர்சிருட்டிநேர்தர, வஞ்சமொன்றிலாவண்ணமீந்தது. (அ)

பறியவூரிடைப்பரவித்தக்கன்வா, னறியவாற்றியவம்மகத்தில்யாஞ்
செறியமேவியதீங்குநீங்குபு, முறியவொல்லையின்முறையிற்செய்தது. (கூ)

மாயவன்முதல்வானவாழ்க்கையர், நேயமாரவாங்கெய்திநீர்மையிற்
றூயபூசனைதொடங்கியேத்திடப், பாயயாவையும்பண்பினீந்தது. (க0)

அம்மையேமயிலாகியாங்கடைந், தெம்மையாட்ருமிறைவற்போற்றுபு
செம்மைசேரவாஞ்சிறப்பினெய்திட, வெம்மைதீரருள்விளைத்தமாண்பது. (கக)

தாருமாவனத்தையலாரோடு, சேருமாதவர்செருக்குமுற்றொழிந்
தோருமேன்மைமாயூரமாத்தலஞ், சாருமேன்மையாற்றலைப்பட்டார்கதி. (கஉ)

தக்கனென்பவன்றனையர்யாருமே, தக்கவீணையோன்சாற்றுமாற்றத்தாற்
றக்கவத்தலஞ்சார்ந்துபோற்றிநந், தக்கசிந்தனர்சார்ந்துளார்கதி. (கங)

யோகவித்தமனென்னுமுத்தமன், பாகமெத்துமத்தலத்தின்பாலடைந்
தேகனைப்பணிந்தெண்ணிருனத்தான், மோகம்விட்டுயர்முத்திசார்ந்தனன். (கச)

இனியசேர்க்கவுண்டின்னியப்பெயர், முனிவனத்தலமுன்னிப்போற்றுபு
தனியளற்றிலாழ்பிதிரர்சாந்தராம், புனிதராய்க்கதிபொருந்தவுய்த்தனன். (கரு)

தீயவாகியகனவுசெய்பல, னேயமாதரார்நிகழுந்தீமையே
மேயநான்முதுக்குறைதலால்விளைந், தாயதீப்பலமனைத்துமாயுமே. (கசு)

தூமகேதுமுற்றோற்றத்தால்வரு, நாமமாரஞரனைத்துநாசமா
மேமமாருமாயூரமெய்திடுந், காமமேவிடிற்கணத்தினுள்ளரோ. (கஎ)

சாந்திராயணந்த்குகிரிச்சிர, மாய்ந்தமற்றுளவிரதமாற்றலி
னேய்ந்தநற்பலமிசைத்தவத்தலந், தோய்ந்தவெல்லையேசுரக்குமென்பரால். கஅ

அத்தலத்தின்மேலாயவோர்தல, முத்தலத்தினுமொழியினில்லையா
லெத்தலங்களுமிதற்கொப்பாகுமோ, கைத்தலத்தினமலகங்காண்டியால். (கக)

அஞ்சனுயகியம்மையோடுமோ, ரெஞ்சலின்றியேயென்றுமேவுவார்
மஞ்சலேலெனுங்கண்டவள்ளலார், றஞ்சலின்றுபேரருள்சுரந்தரோ. (உ0)

வள்ளலாரெதிர்வயங்குதீர்த்தமொன், றுள்ளலாரொலாமுலகமுள்ளலார்
நள்ளலாரொலாமின்பநள்ளலார், விள்ளலாரொமதுள்ளம்விள்ளலார். (உ௧)

பிறங்குமாவயிற்பிரமதீர்த்தமொன், றறங்குலாவுமற்றதன்சிறப்பினை
நிறங்குலாவுமற்றெவர்நிகழ்த்துவார், மறங்குலாவுதறவிர்க்குமற்றது. (உஉ)

ஏத்துகாவிரியிடபதீர்த்தச்சீர், பாத்தியாமெலாம்பகரற்பாலமோ
சீத்துவல்வினைசிதைக்கவல்லது, கோத்துநன்னலங்கொளக்கொடுப்பது. (உ௩)

அந்தமாத்தலமடையின்வல்வினை, சிந்தவாய்ப்பதுசித்தசுத்தியோ
முந்தயாவையுமுடியுமென்றுதன், சந்தவானுலகத்துச்சார்ந்தனன். (உ௪)

அனையன்சென்றபினுன்றவேதியன், புனையவல்லமாயூரம்புக்கன
னினையவின்பருணிமலனுக்கெதிர், துனையவேகிநற்றீர்த்தந்தோய்ந்தனன். (உ௫)

நீறுபூசினனிகழுமாமறை, கூறுகண்மணிகுலவப்பூண்டன
னாறுசேர்சடையமலவள்ளலா, ரேறுசேர்த்திருமுன்னரெய்தினன். (உ௬)

கண்டுதாழ்ந்தனன்கசிந்தெழுந்தனன், மண்டுகாதலிற்றுதிவயக்கினன்
றெண்டுபூண்டவர்க்கருளுஞ்சுந்தரி, யண்டமெஞ்சனுயகியைச்சார்ந்தனன். (உ௭)

ஆங்குமிங்ஙனமன்பிற்போற்றினன், வீங்குமானந்தமிகுபெருக்கெழத்
தேங்குமேதுவாஞ்சித்தசுத்திபூண், டோங்குமாமறையோனுவந்தனன். (உ௮)

மாரவேளுடல்பொடித்தவள்ளன்மா, யூரநாயகனருளுளுறுத்தலாற்
சாரவானவர்தக்கமாதவர், பேரவாவுறுமின்பம்பெற்றனன். (உ௯)

சிந்தவல்வினைசித்தசுத்தியை, வந்தகாலையேவழங்கவல்லது
பந்தம்பாற்றுமாயூரமென்றிடி, லிந்தமாத்தலமெதனொடொப்பதே. (௩0)

சுசன்மப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯௬௬.

# காகபூசையுரைத்தபடலம்.

மின்னுபொன்மேருவிலங்கலினோர்பான்
மன்னுமோராலமரத்துறுபொந்திற்
பொன்னுமொவ்வாமனம்வாய்ந்தபுசுண்ட
னென்னுமோர்காகமிருந்ததையன்றே. (௧)

அத்தகுகாகமனேககற்பங்க, ளொத்தகணப்பொழுதென்றுளமுன்னுஞ்
சித்தவிகற்பமிலாவதைத்தேர்ந்தார், முத்தவசிட்டன்முதற்பலரம்மா. (உ)

மற்றதைக்காண்டிடும்வாஞ்சையுளத்தி, னுற்றனரோர்பொழுதுற்றனராங்குக்
கற்றவர்வந்தமைகாகமுநோக்கிப், பெற்றதுநன்குபிறங்குமகிழ்ச்சி. (௩)

வருகவிருக்கெனவாயுரைசெய்ய, வருகினிருந்தனரத்தகுகாலைப்
பொருவில்கற்பம்பலபோயதுகண்ட, வருவினைகாரணமோதிதற்கென்றார். (௪)

### வேறு.

என்றலுங்காகங்கூறுமுலகமீரோழுமேத்த
நன்றமைமாயூரத்தினம்பிரான்திருமுன்றீர்த்த
மொன்றநன்காடியந்தவுத்தமப்பிரானைப்போற்றி
வென்றவத்தலம்வசித்துமேதகவமர்ந்தேன்பன்னாள். (௫)

அதுபொழுதமலமூர்த்தியாரருள்சுரந்துதோன்றிக்
கூறுமெனவென்னைநோக்கிக்கற்பமெண்ணில்லகண்டு
முறுபுகழ்ச்சித்தசுத்திமுயங்கிமெய்ஞ்ஞானம்வாய்ந்து
சுறுமுகன்முதலோரொத்தத்தவாவினிநிருத்தியென்றான். (௬)

உலகற்பம்பலகண்டும்மோருரோமமுங்கழிதராமை
பெறுசிறப்பம்வாய்ந்தமேனிபெறலருமுண்மைஞான
மறுவற்றவிதந்தந்தன்றேமாயூரமென்னவின்ன
லறுசுற்றத்தோடும்வைகுமனையபுள்ளுரைக்குமன்றே. (௭)

எனக்குமுன்னளவில்கற்பங்கண்டஃதிருப்பதாலென்
றனக்குநல்கியதுபோலத்தலம்பலர்க்களித்ததுண்டு
மனக்குநன்றுயவம்மைமயூரமாயங்குப்பூசை
கனக்குமன்போடுசெய்ததிருதரங்கண்டேன்யானே. (௮)

மலர்மிசைவதியும்புத்தேள்வயங்குமைமுகங்களோடு
பலர்புகழ்மாயூரத்தொன்பதுதரம்போற்றக்கண்டே
னுவர்தலத்தொருமுகந்தீர்ந்தொருபதுதரம்பூசித்துக்
கலர்கொளற்கரியமேன்மைக்கொடுபொலியக்கண்டேன். (௯)

மாயவன்சுத்தவெள்ளைவடிவனாய்மாயூரத்துத்
தாயவன்சரணம்பத்துத்தரந்தொழுதேத்தக்கண்டே
னாயவன்கரியமேனியடைந்துபன்னிருகாலங்கு
மேயவனுகிப்போற்றவிழிகொடுதெரியக்கண்டேன். (௰)

இனையவர்புரிந்தபூசையித்துணையன்றிக்காணேன்
முனையவெங்குலிசத்தோனுமொய்த்தபன்மனுக்கடாமுந்
தனையவர்தமரொன்றுசொலப்படுமிலேகராய
வனையவர்போற்றக்கண்டவதற்குமோரளவுமுண்டோ. (௧௧)

பரசிவனென்றேவன்றேயுள்ளமாயூரப்பண்பின்
வரமுறவுரைப்பார்யாரோவல்லவராவரின்னும்
புரமொருமூன்றுஞ்செற்றோன்கயிலையிற்பொருந்நாண்முத்
திரமுறவினையதாயகேத்திரஞ்செறிந்துவாழ்வான். (௧௨)

பொருந்தவப்பெருமான்செய்தபூரணவருளினாலே
திருந்தவித்தகையபூமிசெறிபெருஞ்சாம்பராகி
யிருந்ததூனானனேகதரங்கண்டேனின்னுங்கேண்மி
னருந்தவமுனிவிர்வேறுற்றமைந்ததும்பல்காற்கண்டேன். (௧௩)

கடுந்தொழிலவுணன்பூமிகவர்ந்ததும்பல்காற்கண்டே
னடுந்தொழில்வராகமுன்போலமைத்ததும்பல்காற்கண்டேன்
படுந்தொழில்வசிட்டரோதும்போலெழுவனமுன்பார்த்தேன்
விடுந்தொழில்வியாசர்வேதம்விரித்ததும்பல்காற்பார்த்தேன். (௧௪)

பாற்கடலமரர்கூடிக்கடையப்பன்னிருகாற்கண்டேன்
மாற்கவினிரோனுகைப்பான்மால்பிறப்பறுகாற்கண்டே
னூற்படுக்கையினுன்புத்தனாகமுப்பதுகாற்கண்டேன்
மேற்படுபெருமான்பல்காற்றிரிபுரம்வீப்பக்கண்டேன். (௧௫)

மாயவன்பாணமாகிவந்ததுமெண்காற்கண்டேன்
றூயவம்மால்பன்னேர்காலிராமனுய்த்தோன்றக்கண்டே
னுயமற்றனையான்கண்ணனாகவிரொண்காற்கண்டேன்
பாயவன்பார்த்தனேடியரமன்போரொண்காற்கண்டேன். (௧௬)

சுந்தரன்காமவேளைச்சுட்டதுமுக்காற்கண்டே
னந்தகன்வீரஞ்செற்றதமைதரவிருகாற்கண்டேன்
மந்திரமறையோன்சென்னிமடித்ததுமெண்காற்கண்டேன்
முந்தியமாயனெய்த்தோர்முகந்ததும்பல்காற்கண்டேன். (௧௭)

இவைபலகாண்டலாலேவந்ததுமெனக்கொன்றில்லை
நவைசெய்யிவ்வுடம்புதாங்குநசைசிறிதேனுமில்லை
குவைபடுதத்துவத்தின்கோளெலாமுதறிப்போக்கிச்
சிவையொருபாகன்றாளேசேருதற்கெண்ணங்கொண்டேன். (௧௮)

உடம்பொடுமிருக்குங்காறுமுறக்கநீத்திருக்கவேண்டு
மடம்படுமுறக்கமுற்றால்வரும்பலபிறவிநீவி
ரிடம்படுமாயூரத்தினெந்தையெம்பெருமாற்சார்ந்து
திடம்படுமுறுதிபெற்றுச்சிறக்கவென்றுரைத்ததன்றே. (௧௯)

உரையதுகேட்டபோதேயுவந்தனராகியாருந்
தரைபுகழ்மாயூரத்தைச்சார்ந்துநற்றீர்த்தமாடி
வரைசிலையாகக்கொண்டவள்ளலைத்தொழுதுவாழ்த்திப்
புரையறுபேரானந்தப்புணரியிற்றோய்ந்துவாழ்ந்தார். (௨௦)

தண்ணியபெருமாயூரத்தலப்புகழின்னதென்னிற்
கண்ணியவனந்தனாலுங்கரைதரமுற்றுங்கொல்லோ
பண்ணியதவத்தீரந்தத்தலத்தினைப்பரவாரொல்லா
மண்ணியபுலையரோமற்றவர்துயர்க்கொழிவுமுண்டோ. (௨௧)

காகபூசையுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௬௦௭.

---

# வயிரவபூசைப் படலம்.

---

எண்ணியவெண்ணியாங்கேயடியவரொய்தநல்கும்
புண்ணியமாயூரேசன்பொலிதிருவருளாற்சிட்டி
நண்ணியபிரமன்பின்னரயர்த்துநாமுதலேயென்றோர்
திண்ணியசெருக்குக்கொண்டான்சிறியர்தஞ்செய்கையென்னே. (௧)

இவனிலையினையதாகவிணர்த்துழாய்மோலிமாலுஞ்
சிவனருளுணரான்யாமேசிருட்டியாதிகள்செய்வோமெப்
புவனமுநம்மதாணைபொருந்துமென்றெண்ணிப்பூமே
லவனினுஞ்செருக்குக்கொண்டானிவனுமற்றவன்பிதாவே. (௨)

இருவர்தமுள்ளக்கொள்கையின்னதேயாகவோர்நாண்
மருமலர்க்கமலத்தோன்பான்மாயவன்சென்றானன்று
விருண்மலச்செருக்கினாலேயிருக்கைநின்றெழான்கைகூப்பா
னொருமுகமனும்பேசானூமனொத்திருந்தானம்மா. (௩)

மாயவனதனைக்கண்டுமலரவன்வதனநோக்கி
யேயுமென்வரவுகண்டுமிருக்கைநின்றெழுந்திலாய்நீ
பாயவந்தனமுஞ்செய்யாய்பகர்ச்சியுமில்லாயின்று
மேயதென்னுனக்கோதென்றான்மற்றவன்விளம்பலுற்றான். (௪)

வந்தநீயெனக்குமுந்திவந்தனஞ்செய்தாயில்லை
யந்தவோர்குற்றமின்மேலாகவும்பொறுத்துளேன்பா
லிந்தவாறுரைத்தல்செய்தாயிச்செருக்காமோவென்றான்
சந்தமாமறைநூல்வல்லான்றன்செருக்குணரானானான். (௫)

உன்னையான்வணக்கஞ்செய்வதுண்டுகொலுரைத்தியென்றான்
பின்னைவாழ்மிறத்தான்கஞ்சன்பேதமாம்பிறவிதோறு
நின்னையான்படைத்தேனெல்லாவுலகமும்படைத்தேனிப்பி
லென்னைநீகாக்குமாறிங்கியம்புதியென்றுசொற்றான. (௬)

முந்திநிற்படைத்ததென்னாய்முறைதபமொழிதல்செய்வாய்
புந்திசற்றில்லாயிந்தப்புன்மையென்மைந்தவென்று
னுந்திபூத்தவன்படைத்ததுண்டுகொலென்றுகோப
நந்தியோரறையறைந்தானாரணன்கொடிற்றிற்கஞ்சன். (௭)

கதுப்பறையுண்டமாயோன்கண்சிவந்தெழுந்துகஞ்சன்
விதுப்புறக்கபோலந்தோறும்வெய்தெனவறைந்தானாக
மதுப்பதுமத்தினானுமாண்டதன்றண்டங்கொண்டு
சதுப்புயமுடையான்மேனிதடித்திடத்தாக்கினானே. (௮)

மாயனுந்தனதுதண்டம்வலிக்கரத்தெடுத்துவீசிப்
பாயமென்மலரோன்மேனிபதைத்திடப்புடைத்தானாக
வாயவக்காலைவிண்ணோரஞ்சினர்மகவானாதி
மேயவெண்டிசைகாப்பாளர்வெயர்த்தனர்கயிலைசார்ந்தார். (௯)

நந்தியைவணங்கிப்போற்றிநயந்தவனனுஞைபெற்று
முந்தியுட்புகுந்தபெம்மான்முன்பணிந்தெழுந்துநின்று
புந்தியின்மலரோன்மாயோன்புவனகாரணர்தாமென்றே
நந்தியசெருக்கினோராய்க்கலாய்த்தனர்நடுக்கமுற்றோம். (௧0)

இருவர்தஞ்செருக்குமாயவிப்பொழுதருடியென்று
பொருவிலெண்டிசைகாப்பாளர்புகன்றனர்வேண்டலோடு
மொருவருங்கருணைமூர்த்தியுலககாரணனெம்பெம்மான்
வருகுறுநகையனாகிவயிரவற்றோற்றினானே. (௧௧)

தோற்றியவடுகேப்புத்தேடுணைமலரடியிற்றாழ்ந்து
போற்றியகையனாகிப்புரிபணியென்னையென்னச்
சாற்றியமலரோன்மாயோன்றலைக்குமேற்கொளுந்தருக்குக்
காற்றியநினைத்தோமென்றானவனதுகருத்துட்கொண்டான். (௧௨)

முத்தலைச்சூலமேந்திமுண்டகன்மால்கலாய்க்கு
மத்தலையடைந்தானாகவனைவருந்தொடர்ந்துசென்று
ரித்தலையினையனெய்தற்கேதுவென்னென்றுள்ளஞ்சித்
தத்தலையுறங்குமாயோன்மறைந்துவைகுந்தஞ்சார்ந்தான். (௧௩)

அதுகண்டுமச்சுறுமலம்புயன்வடுகற்பார்த்தென்
முதுமைந்தவருதியென்றுன்மொழிந்தவாவருவேனென்று
கதுமெனச்சினந்துசென்றுகையுகிரொன்றனலைப்
பதுமனோர்தலையிடந்துவீழ்த்தினுன்பததிவீழ்ந்தான். (௧௪)

வீழ்ந்தவனுய்யவையன்விரைந்தருள்செயவெழுந்து
தாழ்ந்தனனிற்பவெள்ளுந்தலையிழந்ததனையோர்ந்து
வாழ்ந்தனையிருத்தியென்றுமடிதலைகையிலேந்திச்
சூழ்ந்தவைகுந்தம்புக்கான்றூற்றினுன்விடுவச்சேனன். (௧௫)

அனையனைச்சூலத்தேற்றேயச்சுதன்முன்புசென்று
முனையவச்சூலந்தன்னுற்கோதண்டந்திறப்பமொய்த்து
வனையவாய்வழியுநெய்த்தோர்வண்கரக்கபாலத்தேற்று
வினையநாள்பல்லசெல்லவினைத்துமூர்ச்சித்துவீழ்ந்தான் (௧௬)

மங்கலந்தருதியென்றுமாமகளிரந்துவேண்ட
வங்கவட்கிரங்கியன்னுற்காருயிர்கொடுத்துப்பின்னர்
மங்கியவிடுவச்சேனன்றனக்குமுன்மாட்சிநல்கிக்
கங்கைசூழ்கிடந்ததெய்வக்காசிமாநகாமுற்றுன். (௧௭)

உற்றவன்விசுவநாதனெண்மலர்ப்பாதம்போற்றக்
கற்றவர்புகழ்வோயிந்தக்காசிமாநகரின்மேலாய்
நற்றவர்வணங்கவென்றுநாமமர்தானமொன்று
மற்றதுபொன்னிசூழுமாயூரமென்பதம்மா. (௧௮)

ஆயவத்தலத்தையண்மியாங்கெமைப்பூசையாற்றி
நேயமிக்கிருத்தியென்னநெரோலெனவடுகப்புத்தே
ளேமெய்த்தவமுள்ளாரோசூழுமாயூரஞ்சார்ந்தா
னுயன்முற்பொலியாநிற்குநலத்தகுதீர்த்தந்தோய்ந்தான். (௧௯)

விள்ளலைக்குறித்துநின்றமேன்மையோருளத்தினீங்கா
வள்ளலைக்கருணைச்செல்வியஞ்சனாயகியைமாறு
துள்ளலைத்தெழுபேரன்பாலுருகுபுபோற்றிநின்றுன்
றெள்ளலைக்குறிக்குமையனெதிர்ந்திதுசெப்புகின்றுன். (௨௦)

மைந்தநீயின்றுதொட்டுவயிரவகாலனுகி
யுந்துகேத்திரத்துக்காவலொருங்குபூண்டமர்திகையிற்
சந்தமாங்கபாலநெய்த்தோர்தங்கநின்கணத்தார்கொண்டு
நந்தநன்களித்தியென்றுன்வடுகனுமதுநயந்தான். (௨௧)

கேத்திரத்திறந்தோர்தம்மைக்கிளர்நமன்கைக்கொடாத
மாத்திறல்வடுகத்தேவையாயிடைவழுத்துவோர்க
ளேத்தருநரகவாதையிடர்ப்படார்பாவரோறு
மூத்தவனுயவன்னுன்முருக்கிடவுயர்வரன்றே. (௨௨)

வயிரவபூசைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௦௦௯.

# திருமாலவதாரமூர்த்திகள் பூசித்தபடலம்.

சோமகனென்னுமசுரன்முன்னாட்சுருதியனைத்துங்கவர்ந்துகொண்டு
பாமநெடுங்கடல்புக்ககாலைப்பார்ப்பனமாக்கள்வெரீஇயிரப்ப
காமமழுப்படையெம்பிரான்செய்நல்லருள்பெற்றுநறுந்துழாய்ப்பைந்
தாமமுகிலொருமீனமாகித்தாந்திரைமோதுஞ்சலதிபுக்கான். (க)

புக்குத்தகுவனுயிர்சவட்டிப்போற்றிடுவேதமனைத்துங்கொண்டு
நெக்குக்கசிவுளத்தார்கரத்துநீட்டுபுசிந்தைத்தருக்குமேவித்
திக்குக்கலங்கப்புவிகலங்கத்தேவருலகுநிலைகலங்கப்
பக்குப்பிலமும்வெரீஇக்கலங்கப்பாய்திரையாழிகலக்கினானால். (உ)

ஆயபொழுதுபிரமனாதியமரரெல்லாருங்கயிலைநண்ணி
மேயதுமுற்றும்பரம்பரற்குவிண்ணப்பஞ்செய்யநகைமுகிழ்த்து
மாயமகாவலிசிலைதத்துவம்மெனச்சாத்தனையேவினனத்
ஆயவன்மீன்வலைவீசுவோனாய்த்தொக்கதிரைக்கடல்வாய்ப்புகுந்தான். (ங)

நாலுந்துழாயணிமீன்பிடித்துநலியச்சவட்டிவிழியெலும்பு
தேறும்படியிடந்தேதியெங்கள்சின்மயனங்கைவிரலிற்சேர்த்தான்
பாருமமரர்கலக்கந்தீர்ந்தார்பைம்பொற்றிருமறுமார்பினானு
மேறுபிறைக்குங்கழுவாயாற்றவெண்ணிமாயூரமடைந்தனனே. (ச)

வள்ளியநாதன்றிருமுன்மேயமாப்பெருந்தீர்த்தத்திடைப்படிந்து
தெள்ளியவாலயத்துட்புகுந்துதேவர்தந்தேவனைச்சின்மயனை
யுள்ளியயோகியருள்ளத்தானையொப்புயர்வில்லாவொருவன்றன்னை
நள்ளியவன்பிற்றொழுதுபோற்றநாதன்மகிழ்ந்திதுகூறலுற்றான். (ரு)

ஆற்றியதீமையனைத்துநீத்தாயற்புதமாயித்தலத்துமேவிச்
சாற்றியதீர்த்தம்படிந்துநம்பொற்றாள்வழிபட்டதகவினாலே
போற்றியகாவற்றொழிலுமுன்போற்பூண்டுநின்பேருலகெய்திவாழென்
றேற்றியசேக்கொடியானிசைத்தானேற்றுத்தொழுதகன்றான்முகுந்தன். (சா)

அதிதிமகாருந்திதிமகாருமார்கலிமுன்னர்க்கடைந்தகாலை
மதிதொடுமெந்தரவெற்பழுந்தவள்ளற்பரமன்கருணைபெற்றுப்
பொதிவலிமாலோர்கமடமாகிப்பொற்பமுதுகினுறச்சுமந்து
பதியுமமிர்தமெடுத்தபின்னர்த்தருக்கிப்பரவைகலக்கினானால். (எ)

அந்தப்பொழுதுதொழுததேவரமலற்குரைப்பவனையனும்மோர்
தந்தப்பிரான்முகநோக்கியாமைதருக்குமுழுதுமுருக்குகென்னக்
கந்தப்பகன்றைத்தொடையலானுங்கருதும்பரதவனாகிப்போகி
முந்தப்பிடித்தொருகச்சபத்தைமுருக்கித்திருக்கிக்கருக்கினானே. (அ)

மற்றதனோடுபெயர்த்துவந்துமாதேவன்மார்பிலணிந்துபோனான்
சொற்றகவுந்துவமார்பினானுந்தோற்றுப்புரிபிழைத்தீர்வுதேர்ந்து
கற்றவரேத்துமாயூரமெய்திக்காமருதீர்த்தம்படிந்தெழுந்து
பொற்றபிரான்முன்னர்ச்சென்றுதாழ்ந்தான்போற்றிசயசயபோற்றியென்றான்.

மாறுக்கருணைமுழுமுதலேவாள்விட்டொளிகெழுமாமணியே
தேறுச்சிறியன்புரிபிழையைச்சிந்தைகொள்ளாதருள்செய்தியென்ன
நீறுப்புரம்பொடிசெய்தபெம்மானேர்ந்துநின்றீமைகழிந்தபோய
தாருப்பொலிநம்மருட்கிலக்காயுமொனமாலுந்தொழுதுபோனான். (௰)

பின்னுமோர்காலத்திற்செம்பொற்கண்ணன்பெற்றவரத்தின்வலியினாலே
துன்றுபுடவிமுழுதும்பாயிற்சுருட்டிப்பிலம்புக்கொளித்தகாலை
மன்றுமுயர்பதிதன்னருளான்மாயோன்சுவேதவராகமாகிக்
கொன்றுமங்குற்றவனைச்சவட்டிக்கோட்டின்மண்கொண்டுமுன்போலவைத்தான்

ஆயவோர்காலத்தருக்குமேவியண்டமனைத்துநடுநடுங்கப்
பாயவரைகண்மருப்பபற்பிற்கோத்துப்பற்பலவாகவெடுத்துவீசத்
தீயதுவந்ததுலகிற்கென்றுசிந்தனைசெய்துவானாடர்யாரு
மேயகயிலைப்பிரானைத்தாழ்ந்துவிண்ணப்பஞ்செய்துவிளம்பினாரோ. (௧௨)

கேட்டபிரானுமுறுவலித்துக்கேகயமூருநலுங்கடப்பந்
தோட்டணிமார்பன்வதனநோக்கித்தண்ணெனவிப்பொழுதேயடைந்து
கோட்டடலேனக்குறும்படக்கிவருதியெனவக்குமரவேளு
நாட்டஞ்சிவந்தோர்கிராதனாகிநடந்தனன்கோலத்தினேரெதிர்ந்தான். (௧௩)

கண்டபொழுதேசினந்துகோலங்காருங்கடலுநடுங்கவார்த்துக்
கொண்டவரைகள்பலமருப்பிற்கோத்துப்புவனங்குலையவீச
வண்டமனைத்தும்புரக்குஞ்செவ்வேளத்தனையும்பொடியாகநூறி
மண்டமுடுகியெதிர்ந்துடற்றிமற்றதன்கோடுபிடுங்கினானே. (௧௪)

கோடுபறித்தெழுந்தெங்களையன்கோமளமார்பிலணிந்துபோனா
னாடுவராகனிதயத்தெண்ணிநாமெவன்செய்தாமெனக்கவன்று
கூடுமாயூரத்தலத்தடைந்துகோகநகம்பொலிதீர்த்தமாடி
யாடுபிரான்பொன்னடிகள்போற்றியஞ்சலிசெய்துதுதித்தனனே. (௧௫)

அன்பனையாளுங்கருணைவாழ்வேயாருமுறநினுக்குமப்பாற்பொலிவோய்
மன்பனையோடும்விடாதமர்ந்தமன்னுயிர்யாவும்புரக்கும்வள்ளா
லின்பனைமாத்திரையேனுமில்லாவேழைத்தொழிலுவந்தேற்குத்தோளி
லென்பனையிற்சருமம்புனைந்தாயின்னருள்செய்துபுரத்தியென்றான். (௧௬)

உற்றசெருக்கின்பிழையொழிந்தாயோங்குவைகுந்தநகரமேவிச்
செற்றம்விளக்குந்தருக்குநீத்துத்தெய்வம்பேரருள்சிந்தைசெய்து
சுற்றதிதிசெய்தமர்தியென்றான்காகுத்தனுங்கைதொழுதபோற்றி
யற்றமகல்விடைபெற்றுப்போனானணைவழிநின்றினிதுவாழ்ந்தான். (௧௭)

வேறு.

மீட்டுமொருகாலத்துவெய்யவலியிரணியன்றன்
னாட்டுபெருந்தவத்தாலேநல்லவரம்பலபெற்று
வீட்டுமொருபகையின்றிவிரிபுவனந்தாட்படுத்துக்
கூட்டுநெடுநெடுக்கமுறக்கொடுந்தொழிலேதலைநின்றான். (௧௮)

அக்காலமவனைவெலற்காயதிறனுறத்தேர்ந்து
நக்காலமெடுத்தயின்றநம்பர்திருவருள்பெற்றுத்
திக்காலதிமிர்ந்தபுகழ்த்திருமறுமார்புடையண்ணன்
முக்காலஞானமுணர்முனிவர்புகழவன்மைந்தன். (௧௯)

பக்கமொருதன்கூறுபதியநிறுவினன்வலிமை
தொக்கநரமடங்கலாய்த்தூணின்றும்வெளிவந்து
தக்கபகலிரவல்லாக்காலத்திற்றனாவானம்
புக்கவிடமல்லாதவிடத்தவனைப்புரிந்திருத்தி. (௨௦)

நெஞ்சமிளர்ந்துசெந்நீர்விரம்பமாந்தினனதனு
லஞ்சவெறிதலைக்கொண்டாங்கமரர்களைவருத்திடவு
மஞ்சபொலிகளத்தான்பொன்மலரடிவீழ்ந்தவிரப்பத்
துஞ்சபடர்வலிவீரற்பார்த்திதனைச்சொற்றனனால். (௨௧)

வயவீரவிப்பொழுதேநரமடங்கல்வெறிமாய்த்து
நயமாரவருதியெனநங்கள்பிரானருள்செய்யச்
சயவீரபத்திரனுஞ்சரபவுருக்கொண்டெழுந்து
புயனேருமுடம்பினரமடங்கல்வலிபொருதழித்து. (௨௨)

மீண்டுசெருமங்கவர்ந்தனைர்பெருமான்பெரும்பியலிட்
டாண்டுவணங்கினன்போருணர்வுதிப்பமாயவனு
மீண்டுபிழைக்கென்செய்வாமென்றிரங்கிக்கவலுற்று
வேண்டுபொருளருடிருமாயூரத்தைவிரைந்தடைந்தான். (௨௩)

மறமனைத்தும்பொடியாக்குமாதீர்த்தம்படிந்தாடித்
திறமனைத்துமருள்வள்ளல்சேவடிமேற்பணிந்தெழவு
மிறமனைத்துந்தமாய்புனைவோய்நின்பிழைதீர்ந்தனையுலகை
வறமனைத்துந்தவிர்த்தோம்பிவாழென்றான்றொழுதகன்றான். (௨௪)

வேறுமொருகாலத்துவெய்யமாவலியென்பான்
மாறுதவிர்த்தெவ்வுலகும்வயங்கியதன்னடிப்படுத்துப்
பேறுதருமொருவேள்விபெயர்வறச்செய்திடல்குறித்தான்
சாறுகொளுமவனைவெலத்தம்பிரானருள்பெற்று. (௨௫)

ஆன்றதவக்காசிபற்குமதிதிக்குமொருமகவாய்த்
தோன்றலிகற்குறளுருவிற்றோன்றிமகக்களம்புகுந்து
மூன்றடிமண்கொடுவென்றான்மொழிந்தபடியவன்கொடுப்ப
வேன்றனனேழ்வென்றனைவிண்ணிரண்டடியுள்ளாங்கினான். (௨௬)

ஓரடிமற்றவன்றலைமேலுறவைத்துப்பிலத்தழுத்தி
பாரமிகுசெருக்கடைந்தான்பண்ணவர்மற்றதுதேர்ந்து
நாரமலிசடையான்பாலண்ணிவிறைஞ்சினருரைப்ப
மாரனுடல்பொடித்தபிரான்வடுகனைக்கூயேவினான். (௨௭)

அன்னவன்வந்துடன்றுசமர்ராடிவலியறச்சவட்டி
யுன்னரியவுடம்பின்றோலுரித்தொருசட்டையிற்பூண்டு
பின்னமறவொளிர்சட்டைநாதனெனும்பெயர்பூண்டான்
றன்னமர்கையவன்முதுகந்தண்டெலும்புகவர்ந்தமைத்து. (௨௮)

பார்புகழுமொருதண்டபாணியெனும்பேர்பெற்றான்
சீர்திகழுமொருகுதிகாற்சிறந்தநரம்பினைவாங்கித்
தார்பொருவவணிந்துநரம்பணியனெனும்பெயர்தாங்கி
வார்தருதன்கடுங்கோபமாற்றினன்வயிரவனே. (௨௯)

மாயனதுபொழுதனைத்துமறவாமலுளத்துணர்ந்து
நேயமிறன்பிழையகலநெடுங்கழுவாய்செயக்குறித்துத்
தேயமெலாம்புகழ்ந்தேத்துந்திருமாயூரத்தடைந்தா
னுயபுகழ்ப்பெருந்தீர்த்தமாடினனீறணிந்தான். (௩௦)

கண்மணிமாலிகைபுனைந்தகருத்தறவைவந்தெழுந்தெண்ணி
வண்மயிலைப்பெருமானைவள்ளலெனும்பெயரானை
யொண்மயிலோர்புறத்தானையுவந்தேத்திவழிபட்டான்
எண்மருவுமுதலானுந்திருவுள்ளங்களிகூர்ந்தான். (௩௧)

பற்பலகாற்பிழைசெய்துதண்டிக்கப்பட்டனையான்
மற்புயமாயவசிதியமதியொருவிவாழென்று
னற்புதனேயெல்லாமின்னருளொன்றேயஞ்சலித்துக்
கற்புயர்மாமகள்கொழுநன்களித்தேத்திப்போயினன். (௩௨)

திருநெடுமாலவதாரமைந்திடத்துஞ்செய்தபிழைப்
பருவரன்மாய்த்ததுகவுரிமாயூரமெனும்பதியில்
வெருவருமத்தலம்போலவிண்ணிடத்துமுண்டுகொலோ
பொருவருமாமுனிவீர்காள்புந்தியுறத்தெளிவீரோ. (௩௩)

திருமாலவதாரமூர்த்திகள்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௦௪௨.

## தருமன்பூசித்தபடலம்.

ஏதப்படுந்திறமெல்லாமொழியவிமையவரு
மேதக்ககேள்விமுனிவோரும்வேந்தும்விதியுமோர்பான்
சாதத்தமைந்ததிருமாலுமுள்ளித்தகவணங்கி
யோதப்பொலியுந்திருக்கடவூரொன்றொருதலமே. (௧)

அந்தத்தலத்தைம்படைமார்பிலங்கவணிசெய்குழை
சந்தச்செவியிற்பொலியச்சிறுதண்டைதாள்விளங்க
வந்தற்புதத்துயர்மாற்கண்டனென்னுமழமுனிவன்
கந்தப்புதுமலர்தூய்ப்பெருமானைக்கண்டேத்தினனே. (௨)

செருந்திபுன்னைகமரவிந்தங்கூவிளஞ்செங்கழுநீர்
குருந்துமந்தாரந்துரோணமருக்குரவம்வழை
திருந்தநடுக்கைகரவீரமாதிச்செழுமலர்கொண்
டருந்தவமாமுனிபன்னாளும்பூசனையாற்றினனே. (௩)

இவ்வண்ணம்பூசனையாற்றிடுகாலையெழுபுலிங்கஞ்
செவ்வண்ணமாயவுலோசனம்வீசந்திருக்குளத்தோ
டவ்வண்ணமாயபெருமானருட்குரியானைவெளவத்
தெவ்வண்ணமேவிமறலிபகடுசெலுத்தினனே. (௪)

கூற்றுவரக்கண்டுசங்கரவோகொடுநஞ்சமுண்டு
போற்றுபிரமன்முதலோர்க்குயிர்தந்தபுண்ணியவோ
வேற்றுமிசையுவந்தொள்ளடியாரையெதிர்பவவோ
தோற்றுபயந்தவிர்த்தாள்புகலென்றுதுதித்தனனே. (௫)

துதிக்குமதனுக்கிரங்கிச்சுயம்பெருஞ்சோதிமறை
மதிக்குங்கருணைப்பிழம்பாயவன்வெளிவந்துமின்னைத்
திதிக்கும்படியுற்றனமென்றருளிச்செதிர்ந்துசின
முதிக்கும்படியெதிர்நின்றவன்மார்பிலுதைத்தனனே. (௬)

உதையொன்றுகொண்டுயிர்மாண்டானமன்பின்றுயிரளிப்பக்
கதையொன்றுகையொடெழுந்தினிச்செய்யக்கடவதென்னென்
றிதையொன்றுவெற்பத்தனைபாவமேனுமிறுக்கும்வளந்
ததையொன்றுபூம்பொழின்மாயூரமாத்தலஞ்சார்ந்தனனே. (எ)

சார்ந்துதிருமுனர்த்தீர்த்தம்படிந்துதவாதவினை
யீர்ந்துபொலிதிருவெண்ணீறுபூசியெழுத்தைந்தெண்ணி
யோர்ந்துதிருப்பெருங்கோயிலைச்சார்ந்துருகிப்பணிந்து
தேர்ந்துபெருவள்ளலாரடிப்பூசனைசெய்தனனே. (அ)

புண்ணியமாஞ்சனுயகிபாதமும்போற்றிசெய்து
கண்ணியவத்தலத்தீசானதிக்குக்கலந்துநயந்
தண்ணியமேன்மைச்சிவலிங்கமொன்றங்கமையநிறீஇத்
தண்ணியதீர்த்தமுந்தொட்டரும்பூசைசமைத்தனனே. (கூ)

காலையிற்றான்செய்சிவலிங்கபூசைகதிர்ப்பச்செய்து
சோலையிற்பூங்குழல்பால்வள்ளலார்முன்றுணைந்துவந்து
வேலையிற்றோன்றுநிறத்தானெப்போதும்விழைந்திறைஞ்சு
மாலையிற்போற்றித்துதிபலவாகவழுத்துவனே. (க0)

அத்தாவெனிலவர்தன்மையெண்ணாமலருள்சுரக்கும்
பித்தாகொடியவெனையுநன்காண்டருள்பேசரிய
சுத்தாதொழும்பர்தமெய்ப்பில்வைப்பேசுடரார்மணியே
முத்தாசெழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (கக)

காவாயெனிலவர்தன்மையெண்ணாதுகடைக்கணிக்குங்
கோவாயெனையுங்குறித்தாண்டுகொள்கொடுநஞ்சமுண்டுஞ்
சாவாய்மறைமுடிக்கெட்டாய்மெய்ஞ்ஞானத்தனிச்சுடரோ
மூவாய்செழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (கஉ)

அன்றோவெனிலவர்தன்மையெண்ணாமலருள்சுரக்கும்
பொன்றோவெனுஞ்சடையாயடியேனையும்பொற்புறவாள்
பன்றோதகவுந்தவிர்தரயாரும்பரிந்துதொழு
முன்றோய்செழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (கங)

என்றுறதிக்குங்கொடுங்கூற்றுவன்முன்னெழுந்தருளிக்
கன்றுமிருகங்கரத்தேந்தினான்கொடுங்காலவனை
யொன்றுபிழைதவிர்ந்தாய்முன்னையாட்சியினொன்றிடுதி
பொன்றுதறின்னநமைப்போற்றுநர்பாற்புகுதரினே. (கச)

அன்றியுமித்தகுமாயூரங்கண்டவராரெனினுங்
கன்றியுமின்னகர்காணப்பெறார்கருதாயெனினின்
வென்றியுமாக்கமுமாட்சியும்யாவும்விளிந்தொழியு
மொன்றியுமொன்றாக்கலப்புறுவார்க்கஃதுறுவதன்றே. (கரு)

கூடியவன்பினொருநீயருச்சித்தகோசத்தியா
நீடியபேரருளோடுறைவோமந்நிறைகுறியும்
பாடியவாவியுமுருநின்பேராற்பரவுகவென்
றாடியகூத்தன்மொழிந்தான்மறைந்தனனவ்வயினே. (கசு)

புத்தியென்றேற்றுப்பணிந்துதன்னூர்ப்புகுந்தானியமன்
சித்திபெற்றெய்தியதோர்ந்துதற்சேர்ந்தகணங்கட்கெல்லாம்
பத்திசெய்வள்ளலருளெடுத்தோதிப்பரவுசெங்கோ
லெத்திசையுஞ்செலமுன்போனடாத்தியிருந்தனனே. (௧௭)

தருமன்வரம்பெற்றகாரணத்தாலத்தலம்பொலிந்து
தருமபுரஞ்சிவலிங்கம்பொலிந்துதருமலிங்கந்
தருமம்வளர்க்குந்தடமும்பொலிந்துதருமதடந்
தருமமுணர்ந்தவரொன்றோதிடும்பெயர்சார்ந்தனவே. (௧௮)

காரட்டநீலகண்டப்பெருமானமன்காய்ந்தியற்று
போரட்டகாரணத்தாலந்தத்தானமும்போற்றுமொரு
வீரட்டமாயதுமாயூரத்தெல்லையுண்மேவியது
பேரட்டமூர்த்தியங்கக்கோலங்கொண்டுபிறங்குவனே. (௧௯)

காலசங்காரப்பெருமானைக்காலன்பதிட்டைசெய்த
வாலமுண்டானையிடமோரிரண்டினுமண்ணித்தொழா
மூலபண்டாரமென்மாயூரத்தாதிமுனம்பணிவார்
சாலவுண்டாகுமின்பத்தினராகித்தழைபவரோ. (௨௦)

தருமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௦௬௨.

## காமன்பூசைப்படலம்.

கனிவனப்புமை, பனிவரைத்தலைத், தனியுதித்தநாட், குனிபொருப்பினன். (௧)

நாரவாவிமா, யூரமாநகர்ச், சாரவாயகா, லாரவாந்திசை. (௨)

ஆய்தருங்கடுக், காய்வனத்திடை, மாய்வில்யோகமுற், றேயிருந்தனன். (௩)

ஆயநாளுயி, ராயயாவையு, மாயபோகமற், றுயவைகின. (௪)

மாயனெண்ணுபு, நாயன்மேற்கணை, போயின்னேதொடு, சேயனேயென. (௫)

மாரவேளுமோ, ரீரமார்கணை, நேரவாய்த்தொடுத், தாரவோடினன். (௬)

ஏறுசேவகன், கூறுமோர்விழி, வீறுதீயினு, னீறுபட்டனன். (௭)

இரதிமாழ்குற, வரவப்பூணினன், பரவனங்கனும், வரமளித்தனன். (௮)

உருவந்தற்கலான், மருவிலானைக்கண், டொருமடந்தையுட், பொருமறிர்ந்தனள்.

மழைபொருங்களத், துழைகொள்கையற்குப், பிழைசெய்தாமெனக், குழையு
[நெஞ்சினன். (௧௦)

தாரமாதொடு, மீரவான்பொழி, லாரமேயமா, யூரமெய்தினன். (௧௧)

பாவநாசநீர், மேவமூழ்குபு, தேவதேவையந், தேவன்போற்றுவான். (௧௨)

தஞ்சமேயென, வஞ்சலம்மையோ, டெஞ்சலின்றிவேண், மஞ்சன்போற்றுவான்.

போற்றுநாளிடை, நிற்றுமேனியா, னுற்றுபேரரு, ளேற்றுவாழ்ந்தனன். (௧௪)

நட்டமாடினோர், பட்டவேளுடல், சுட்டதானம்வி, ரட்டமாயதே. (௧௫)

அந்தத்தானத்தை, முந்தப்போற்றிடி, னெந்தப்பேறுமே, வுந்தத்தோயுமே. (௧௬)

பாரவாவுமா, பூரவெல்லையுட், சாரவானர்வா, யாரவேத்திட. (௧௭)

இட்டமாயவி, ரட்டநான்கெனிற், பட்டமான்மியஞ், சட்டயார்சொல்வார். (௧௮)

காமன்பூசைப்படலம் முற்றிற்று.

ஆ-திருவிருத்தம் ௧௦௮௦.

# தீர்த்தவிசேடப்படலம்.

கரவுதீர்மனம்புகுங்கனிச்சியங்கைவள்ளலா
குரவுசேருமயிமுகத்தினுற்றுநாளுமுயர்புறும்
விரவுபாவவினைமாய்க்கவெந்தழற்சுவாலையாம்
பரவுமான்மியங்குலாயபாவநாசதீர்த்தமே. (௧)

அட்டமூர்த்தியாதிநாவிலங்கைதாங்குஞலத்தாற்
றெட்டகாரணந்தெரிந்துகுலதீர்த்தமென்னவு
மிட்டவாதிநாவினுயதெண்ணியெண்ணிலாவளம்
பட்டவாதிதீர்த்தமென்னவும்பகர்ச்சிமேயதால். (௨)

தேவதேவவள்ளலார்திருந்துசன்னிதித்தலைப்
பூவராதியாவரும்புகுந்துமூழ்கின்மற்றவர்
பாவநாசமாக்கலாற்பாவநாசதீர்த்தமென்
றேவரும்புகழ்ந்துலாக்குநாமமெய்திற்றப்புனல். (௩)

தருமமேவால்கலாற்றருமதீர்த்தமிகுதியு
மருவருத்தநல்கலாலருத்ததீர்த்தமாண்புசால்
பொருவில்காமநல்கலாற்காமதீர்த்தம்புன்மைதீர்த்
திருவுமுத்திநல்கலான்முத்திதீர்த்தமென்பரால். (௪)

செம்மைமேனிவள்ளலார்திருந்துசொற்றலைக்கொடு
மும்மைஞாலமீன்றதேவிமூழ்கமுன்னுருத்தரு
மெம்மையாள்பெருந்தடத்திலங்குமான்மியம்பல
வெம்மையார்மறத்தினைக்குமைக்கும்வீறுமிக்கதே. (௫)

கரையின்மேல்விருக்கமேவுகாமர்மஞ்ஞைநீழலப்
புரையில்வார்விழுதோன்றல்போந்துமுன்னமூழ்கிய
வரையின்மஞ்ஞையாதிபாயமஞ்ஞையின்கண்வாங்கிய
விரைகுலாமுடம்புதன்றுள்வைத்திருத்தல்விழையுமே, (௬)

அன்னமாதியெண்ணில்புட்களன்னநீர்ப்பயின்றிடன்
முன்னமாமயூரமெண்ணிலாதமூழ்கித்தேவுரு
நன்னர்மேவுதிறனுணர்ந்துநாமுமெய்தலாமெனப்
பன்னவாரிசப்புனற்பயிற்சியாற்றலொக்குமே, (௭)

துறைவிராயநான்முகன்றுறைந்தபூவிருக்கைபெற்
றிறைவிராயபல்லுயிர்ச்சிருட்டியன்னமேய்ந்துரு
மறைவிராயவொலிவிளக்கிமுளரியோம்புமான்பினாற்
பொறைவிராயமண்படைத்தபுலவனொக்குமப்புனல். (௮)

சங்கநேமியேந்தலாற்றண்டுழாயளாவலாற்
பங்கயக்கண்மாவொடும்பார்மகட்டழுவலாற்
றுங்கவாமைமீனுருத்தொடர்ந்தவாற்றிறத்தினா
லங்கண்ஞாலமுழுதுமோம்புமன்னனாங்கடுக்குமே. (௯)

இருவராலளர்திடாமையியைதலால்விலங்கலீன்
பருவராததோகைவந்துபண்பளாயுவத்தலா
லருவராமல்யாருமண்மியடர்மலங்கழித்தலாற்
பொருவராதபுண்ணியப்பிரானையொக்கும்பூம்புனல். (௧௦)

வேறு.

திருந்தியபாவநாசத்தீர்த்தந்தோய்சென்னியெல்லாம்
பொருந்தியதெய்வக்கங்கைப்புண்ணியதீர்த்தந்தோயு
மருந்தினுமினியநன்னீரிருகண்ணான்மகிழ்ந்துகாண்பார்
வருந்துதலொழிந்துமுக்கண்வாய்ப்பதற்கையமின்றே. (௧௧)

புரவொன்றுபாவநாசப்புண்ணியப்பெருந்தீர்த்தத்தி
னரவொன்றோர்மண்டுகத்தையங்கார்ந்துபற்றியுண்ண
விரவொன்றுகண்டமாதியியைந்தவத்தவளைபின்ன
ருரவொன்றுமதனைப்பூண்டதும்பராதியர்வியந்தார். (௧௨)

பூதமோரைந்துளொன்றாய்ப்பொலிதனக்குள்ளதாய
வேதமில்குறிதெரித்தாங்கெங்கணுமலர்வகஞ்ச
மாதரம்பொலியமூழ்கினாதனமாதல்வேண்டி
மாதர்மற்றவையொருங்குவாய்ந்துசேர்ந்திருத்தன்மானும். (௧௩)

அன்னசெங்கமலமேலாலணிவளையமருங்காட்சி
மன்னவிங்கடுத்தமூழ்குமாட்சிமையாளரங்கை
பன்னமற்றிதுபோற்பெற்றுப்பரிப்பதுமிதைத்தானென்று
நன்னயம்பொலியயார்க்குமுணர்த்துமோர்நலமேபோலும். (௧௪)

திருந்தியபாவநாசத்தீர்த்தமேல்கரைப்பாலையன்
பொருந்தியதிருமுன்வைகிப்பொற்பமைசிராத்தஞ்செய்வோர்
பெருந்துயரளற்றிலாழும்பிதிரரைக்கரையேற்றிச்சீர்
தருந்திருச்சிவலோகத்திற்றங்கவேற்றினவராவார். (௧௫)

மருவரும்பாவநாசவளம்பொலிதீர்த்தக்கோட்டிற்
பொருவருஞ்சிராத்தஞ்செய்யும்புண்ணியர்தருமெள்ளொன்றற்
கொருவருஞ்சிவலோகத்திலொருபத்துநூறாண்டெல்லை
வெருவரும்பிதிரர்மேவவிட்டவராவரம்மா. (௧௬)

வயங்குறுமாண்டின்றோற்றமருவுமீரயனத்தோற்ற
நயங்கிளர்திங்கட்டோற்றநலமலியீருவாக்க
ளியங்கிருகதிரைநாகம்விழுங்குநாளிவைமுன்னாகப்
பயங்கிளர்விசேடநாளிற்படிதரிலதிவிசேடம். (௧௭)

துறுவைமன்றுதிகொண்டுசமைதரச்சுத்திசெய்து
மறுவைநன்கியையவோதிமாண்புடைவிதிவழாமற்
புனிதவத்தீர்த்தமாடிப்புராதனனடியார்கையி
லினிதலமசெம்பொன்றுதியேன்றமட்டுதவல்வேண்டும். (௧௮)

புண்ணியவர்க்கீராடிப்பொருளளவைக்குத்தக்க
கண்ணியதானஞ்செய்துகருதரும்வள்ளலார்க்கு
நண்ணியவவர்பான்மேவிநகுமபயாம்பிகைக்குந்
தண்ணியவபிடேகாதிசமைத்திடலதிவிசேடம். (௧௯)

வள்ளலாரக்கீராடுமாண்புடைத்தினத்துமூழ்கி
யெள்ளலாகாதவன்னமினிதவரடியாருண்ண
நள்ளல்கூரனையதீர்த்தக்கோட்டின்வாய்நயப்பவூட்டுந்
தெள்ளல்கூர்மனத்தார்பேறியாவரோசெப்பற்பாலார். (௨௦)

அலையெறியனையதீர்த்தத்தமைந்தசோபானங்கட்கு
நிலைதபுநிலமுண்டாகினிலையுறப்புதுக்குவோரு
மலைதருதொள்ளிபோக்கிப்புனிதமேவயக்குவோரு
மிலைமலர்நந்தனங்கள்களையுறவியற்றுவோரும். (௨௧)

கருணையங்கடலாம்வள்ளல்காமருபிராட்டியோடும்
பொருள்பெறுமகார்களோடும்புணைவிறைந்துலவுசாறு
பெருகவத்தீர்த்தத்துள்ளாற்பிறங்குறநடாத்துவோரு
மிருளறுசிவலோகத்தேபுகுந்துபேரின்பந்துய்ப்பார். (௨௨)

இதுவரையுரைத்துவந்தவறமியற்றாரோயேனு
முதுபுகழ்த்தீர்த்தத்தின்முயங்கனுசிதஞ்செய்யாமை
யதுவுமோரறமேயாகுமவ்வறமேனுஞ்செய்க
சதுமுகன்முதலோர்போற்றுஞ்சிவபுரஞ்சார்தல்வேட்டார். (௨௩)

இன்னமாதீர்த்தந்தன்னிலெவ்வெத்தேயத்துள்ளாரு
நன்னர்வந்தாடல்வேண்டுநடப்பதுமுற்றாதென்னி
லென்னவூர்தியின்மேலேனுமிவர்ந்துவந்தாடல்வேண்டுஞ்
சொன்னதுமுற்றாதென்னிற்சொல்லுதுமப்பாற்கேண்மின். (௨௪)

வயங்குபொன்னுதவியந்நீர்வரவழைத்தாடல்வேண்டு
மியங்குமற்றதுவுமொல்லாதெனிற்படிந்தாடினோர்த
நயங்குலவடியிற்றாழ்ந்துநயந்துளங்கசிதல்வேண்டும்
பயங்கிளரதுவுமுற்றாதென்றிடிற்பகரக்கேண்மின். (௨௫)

சாற்றுவன்பாவநாசத்தடம்புனறோய்ந்துவந்த
காற்றுமேற்றோயுமாறுகனிவுடனேற்றல்வேண்டு
மாற்றுமற்றதுவுமேலாதெனிலந்நீர்ப்படிந்ததாகப்
போற்றுபாவனைசெய்தேனும்பொலிந்தினிதிருத்தனன்றும். (௨௬)

அன்னதுமொல்லாதென்னிலவர்க்குநாமுரைப்பதில்லை
கொன்னவில்குலைகாசங்குட்டநோய்கரட்டுவாதம்
பன்னருங்குன்மமுன்னுப்பற்பலகொடுநோயாவுஞ்
சொன்னவத்தீர்த்தத்துள்ளோர்துளிகொளிற்றொலைந்துபோமால். (௨௭)

ளொர்புகழ்மிகுமாயூரக்ஷேத்திரத்தெல்லையுள்ளால்
வளர்பலதீர்த்தமின்னும்பற்பலவயங்காவிற்குந்
தளர்விலன்னவையாங்காங்குச்சாற்றுதுமுணர்ந்துகொண்மின்
களிர்முதன்மருவுமண்ணல்கழற்கன்புபூண்டுளீரோ. (௨௮)

தீர்த்தவிசேடப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௧௦௮.

# அகத்தியர்பூசைப்படலம்.

பிரியமிருத்தவரைக்கலைசோலைபெருமுகின்மேற்போர்வை
யிரியவல்லாத்தலைச்சுற்றுவிண்கங்கையெனக்கொடிருமலயத்
தரியதவத்தினுயர்ந்தவனுயவகத்தியமாமுனிவன்
மரியபன்மாணவர்கூட்டந்தழுவவயங்கியமர்தருநாள். (௧)

வண்ணம்பொலியுமறைத்தலைமேவியமாயூரமாத்தலம்புக்
கெண்ணம்பொலியும்படிவள்ளலார்தமிணையடிச்சேவைசெயத்
தண்ணம்பொலியுந்திருக்கையவர்தந்தவாவருளாலெழுந்தான்
றிண்ணம்பொலியுமொருபன்னிருவருஞ்சேவித்துச்சூழ்தரவே. (௨)

கானமுங்குன்றுநதியும்பதியுங்கடுஞ்சுரமுங்கடவா
வீனமுந்துன்புமிலாதமாயூரத்தையெய்தியெண்ணில்லாச்சிவத்
தானமுந்தோய்ந்துவரும்பெரும்பொன்னித்தடநதிநீராடி
யேனமுமன்னமுங்காணரும்வள்ளலையெண்ணிவெண்ணீறணியா. (௩)

கண்மணிபூண்டைந்தெழுத்துங்கணித்துக்கசிந்துமணல்கவரா
விண்மணிநேரமிளிர்பெருங்கோவிலுண்மேவிவிளங்கொருசார்
தண்மணிவீசுமொருபெருங்கோட்டுத்தலைவனுருப்புனையா
வண்மணிநேருமகத்தியமாதவமாமுனிபூசைசெய்வான். (௪)

பன்னிருமாணவரும்பணியேற்றுப்பகர்ச்சிவழியொழுகத்
தன்னிருகைகொடுமஞ்சனமாதிதயங்கநட்டாத்தியபி
னென்னிருவல்வினையுந்தபுத்தாளுமிறைவற்குத்தன்பெயரிட்
டுன்னிருபாதம்வணங்கியெழுந்துநின்றேத்திடுவான்றுதியே. (௫)

மண்ணவராதியர்சூழ்ந்தினிதேத்திடுமாமயிலாடுதுறைக்
கண்ணவர்செய்பணிகண்டருள்செய்யுமகத்தியவாரணமே
நண்ணவராகமுன்னுயவைமாற்றிநயந்தருகற்பகமே
பண்ணவருட்கொள்சிந்தாமணியேநீபல்லாண்டுபல்லாண்டே: (௬)

எத்திக்குந்தன்னரையாடையெனப்புனையீசன்றிருமகனே
முத்திக்குவித்தெனயாவரும்பேசமுளைத்தவமொய்யமர்செ
யத்திக்கிரங்கியருள்பதித்தூர்ந்தவகத்தியவாரணமே
பத்திக்கினியபராபரனேநீபல்லாண்டுபல்லாண்டே. (௭)

வாசவன்மாமலரோனெடுமான்முதல்வானவர்சூழ்ந்தேத்தப்
பேசரிதாமிடையூறுதவிர்த்துப்பெரிதருள்புண்ணியனே
யாசமையாச்சிவயோகருளத்துள்கத்தியவாரணமே
பாசமொடங்குசமேந்தியகையாய்பல்லாண்டுபல்லாண்டே. (௮)

இருதயமுதன்மூன்றிடத்தினங்குட்டமியைதருகனிட்டைமுன்மூன்மூன்
மருவுறநிசெத்துத்தற்சனியிரண்டால்வளவியகண்டத்தைச்சுற்றிக்
கருதிடையளவிற்கவசத்தையெண்ணிக்கரிசறநிசெத்தநாமிகைக
ளொருவலமுதலாயகங்கையத்திரத்தையுளசெயாநிசித்திடல்வேண்டும். (௨௧)

பரவுகைத்தலத்திற்றுளமோர்மூன்றும்படவத்திரத்திருற்செய்து
விரவுசோடிகையும்படந்தவத்திரத்தான்மிளிர்சிரந்திக்குப்பந்தனஞ்செய்
துரவுகொள்கவசம்வவுசடந்தத்தோடுரைத்தவகுண்டனமியற்றி
யிரவுதீர்மூலத்தடிமுதற்சென்னியீறிருகைவிரித்துயர்த்தல். (௨௨)

புண்ணியந்தருமாமுத்திரையீதுபுகலங்கநியாசமென்றுரைப்பர்
நண்ணியவளமாற்சனமினிப்புகல்வாநம்பிராணகமப்படியே
யண்ணியவலக்கையங்குட்டமதனாலவிர்வலநாசியையடைத்துக்
கண்ணியவிடப்பானாசியத்திரத்தாற்கவினுறச்சோதனைபுரிந்து. (௨௩)

பின்னருமிடப்பானாசியைவலக்கப்பிறங்கநாமிகையினாலடைத்து
நன்னர்கொள்வலப்பானாசியைத்திறந்துநயங்கொண்முன்மந்திரம்பகர்ந்து
பின்னமொன்றில்லாச்சோதனைசெய்துபிறங்கமுன்போல்வலம்புதைத்துத்
தன்னமொன்றில்லாச்சங்கிதையோதித்தக்கவாபூரகஞ்செய்து. (௨௪)

அறையுமவ்விடப்பானாசியைவலக்கையநாமிகையாலுறப்புதைத்து
நிறைதரமுன்போற்சங்கிதையோதிநிகழ்தராவண்ணங்கும்பித்து
முறைவலநாசிதிறந்துசங்கிதையான்முனிவறவிரேசகஞ்செய்து
குறைவிலவ்வலக்கைவலச்செவிமூலங்கூறிவைத்திடுதலாயாமம். (௨௫)

ஆன்றவங்குசமுத்திரையினால்விந்துவாரமுதினைவவுசடந்த
மேன்றவிதயஞ்சொற்றெடுத்துநீரிடைவைத்தியைமூலத்தாற்சிவதீர்த்தந்
தோன்றநன்காக்கித்திக்குப்பந்தனமுற்சொல்லியவனைத்தையுஞ்செய்து
சான்றவர்புகழுந்தியானமேற்செய்யத்தக்கதென்றுரைப்பராய்ந்துணர்ந்தோர்.()

திருமுகநான்கெண்விழிவலஞ்சிருக்குச்செபமிடங்கமண்டலந்தண்ட
மருமமுர்நூல்செவ்வாடைமெய்ம்மணிப்பூண்வண்பதுமாசனமிளமை
பொருவில்சத்துவமஞ்சடையுடைப்பிரமபொன்னடிப்போதுவைகறைவா
னொருவறவுடுக்கள்விளங்கிடுகோலத்துன்னுகவிருதயத்துறுத்தே. (௨௭)

ஒருமுகமிருகண்சதுர்ப்புயமபயமொளிர்கதைவலமிடஞ்சங்கம்
பொருதிறலாழிவெண்ணிறந்துகசுபூந்துழாய்பொலிதருமுந்நூற்
றருணமொண்பதுமாசனம்பொற்பூணாகாசனவிராசதமிவையுடைய
திருவையுச்சிப்போதொளிர்தருபுருவந்திகழ்தருநாப்பணுன்னுகவே. (௨௮)

தனிமுகமுக்கண்செபவடஞ்சூலந்தகுவலமிடஞ்சத்தியபய
நனியெழினீலநிறஞ்சடையதன்பானகுபிறையாதனம்பதுமந்
துனிதவிரிடபந்தாமதகுணஞ்சாறுயவிரவுத்திரிதன்னைக்
கனிதருபிரமரந்தரத்தினனோர்பாதிகாணந்தியிற்குறியே. (௨௯)

மூவருஞ்செயற்குச்சான்றினவொன்றுமுன்னிநாலாவதுசந்தி
மேவருஞ்சத்தியுருவலாவுருவைமேதகவென்னுகவெண்ணிப்
பாவருந்தீர்த்தம்வலக்கையாலெடுத்துப்பரவுறுமிடக்கையிற்சேர்த்தே
யோவறும்வலக்கையதனடிச்சார்த்தியோங்குறுசங்கிதைகூறி. (௩௰)

வரவுசடந்தமூலஞ்சொற்றொருகால்வன்கும்பமுத்திரைபிடித்துச்
சிரமிசைத்தெளித்துப்பின்னுமந்நீரிற்பிறங்கியசங்கிதைசெப்பி
விரவுறவெடுத்தாங்கிடக்கையினமைத்துவிழ்சலம்வவுசடந்தஞ்சால்
பரவுசங்கிதையாற்சிரமிசைப்பொருந்தப்பதினொருதரம்புரோக்கணித்தல். (௩௧)

ஈதுமார்ச்சனமாமிடக்கரத்தொழுக்கினெஞ்சுநீர்வலக்கரத்தேந்தித்
தீதிர்விசேடபாவனைசெய்துதிருந்திடநாசியிற்புகுந்து
மோதுபாதகத்தையரித்துமைக்குழம்பாய்முகிழ்வலநாசியின்வழிக்கீழ்ப்
போதுவதாகவெண்ணியும்படந்தவத்திரமந்திரம்புகன்று. (௩௨)

முனிவொடுவலப்பாலழனிறவயிரக்கன்மிசைமுருங்கவிட்டிடுக
துனிதவிரீதேயகமருடணமார்நுயநீராசமித்ததன்பி
னனியுயர்சகளீகரணமுஞ்சமைத்துநாடுகவசத்தினிரள்ளி
யினிதுறத்தன்னைவளைத்துமாதேவனிணையடிதியானித்தல்வேண்டும். (௩௩)

குசையுடன்காயத்திரிமனுமூலங்கூறுபுமும்முக்காற்றற்பித்
திசைதரவவைபப்பத்துருக்கணித்திட்டெழின்மிகுசங்கிதைபேசி
நசைபெறவொருகாற்றற்பித்தேரம்பனகுசுடர்வேற்கரக்கந்த
னசைவறுகவுரிமனுக்களொவ்வொருகாலறைந்துதற்பித்திடன்முறையே. (௩௪)

கதிர்மனுமுக்காற்கூறிநீரிறைத்துக்காமருமந்திரந்தேவர்
பிதிர்தலின்மனுவோதுபுகர்நுதியாற்பிறங்கவொவ்வொருதரந்தற்பித்
ததிர்தலினிருடிக்கங்குலியிடையான்மக்கட்குக்கனிட்டையினடியா
னுதிர்வில்பூதங்கட்குறுமணிக்கட்டாளொளிர்பிதாமாதாஞாதிருவே. (௩௫)

ஆசான்மற்றிவர்க்குத்தற்சனிவிரலங்குட்டநள்ளொளொடுமொருகா
னேசாரத்தற்பித்திடுவதுமுறையாநிகழ்சுவாகாந்தமந்திரத்திற்
கேசாரத்தேவரிருடியர்தங்கட்கியைதருநமோந்தமானுடர்க்கு
மாசாராவவுசடந்தமாம்பூதமகிழ்ச்சிமீக்கொளும்வவுசட்டால். (௩௬)

பிதிரர்கடமக்குச்சுதாவெனப்புகல்வர்பின்னுமாசமனநன்னியாச
முதிர்தரச்செய்துநகுபிராசாதமொழிந்துமுன்சொற்றமுத்திரையா
லுதிர்தராதமுதம்விந்துவினொடுக்கியொண்கதிர்மண்டலத்தமரு
மெதிரிலாப்பரனைப்பணிந்துமூலஞ்சொற்றீகமற்றவனுக்கப்பலனே. (௩௭)

சந்திதற்காலந்தப்பிடிலொருகாற்சங்கிதையுரைத்திடல்வேண்டுஞ்
சந்தியொன்றொழியிற்சாதநூறிரண்டேற்சாற்றியதோரிருநூறுற்
சந்திமூன்றொழியினதுமுந்நூறுரைத்துத்தவிர்ந்திடவேண்டுமென்றுணைவச்
சந்திநாலாவதொழிந்திடிலிரண்டுசதஞ்செபித்திடல்வழக்காமால். (௩௮)

பிணியினர்பன்னாட்டவறிலாயிரமோர்பிணியிலார்தவறினிரயுதந்
தணிதரப்புகன்றுபாதகமுருங்கத்தக்கதாமோமமுமாற்றிப்
பணியணிப்பெருமாற்கினியதென்றெவரும்பகரபிடேகமுஞ்செய்து
கணிதமிலடியார்க்கிரும்பொருள்வழங்கிக்கைகுவித்திறைஞ்சுதன்மரபால். (௩௯)

சந்தியிவ்வாறுமுடித்தவன்பதுமாசனத்தமர்ந்தியையவாயாம
முந்தியசகளீகரணநன்கியற்றிமூலமந்திரத்துநூற்றெட்டு
நந்தியகணித்துவிருப்புண்டேன்மேலுநவின்றகோரமுமுடிபுரைத்தே
யுந்தியசகளீகரணம்பின்னருஞ்செய்தொண்பூதிதரித்திடன்முறையே. (௪௦)

அனுட்டானவிதிப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௬௧௮.

# சூரியபூசாவிதிப்படலம்.

அத்திரக்கூடடைந்துபிருதிவியெழுவாய்மாயாந்தமாமுப்பத்தோர்
தத்துவமொஞ்சாற்கடந்துபூசையிடஞ்சுத்தவித்தைநாமாவெண்ணி
யொத்தபொருளொடுகிழக்குப்பார்த்தமர்ந்தத்திரத்தாலொண்கரஞ்சோதித்துச்
சித்தமுறவவுசடந்தமூலத்தாலிருகரமுஞ்சேரச்சேர்த்து. (௧)

பெருவிரற்பாற்றற்சனிகளாவிதயம்பெருவிரலாற்கனிட்டையாதி
யொருமூன்றின்பாற்சென்னிசிகைகவசந்தற்சனிக்கணுறுகுட்டத்தான்
மருவியவத்திரம்பேசிநிசிக்கவசஞ்சொலிக்கைவயங்கச்சுற்றிக்
கருவில்வவுசடந்தமூலஞ்சொலிக்கைசேர்க்கவிதுகரநியாசம். (௨)

விழையுடம்புமூலத்தாற்சுத்திசெய்தபின்புபெருவிரலினோடாந்
தழைகனிட்டைமுதன்மூன்றுவிதயஞ்சிரஞ்சிகைபிற்றவாமலந்தக்
குழைமனுக்கூறுபுநிசித்துத்தற்சனிகளாற்கண்டங்குலவச்சுற்றிப்
பிழையொருவத்தனநடுவிற்கவசமறுவோதிவளம்பெறநிசித்து. (௩)

மத்திமைதற்சனிகளினேத்திரங்களினேத்திரங்கூறிவயங்கத்தத்திற்
பத்திமையினநாமிகைகளானகுமத்திரங்கூறிநிசித்தல்பண்பா
மத்திரமந்திரங்கூறிச்சோடிகையாற்றிசையைந்தோடைந்தும்பந்தித்
தெத்திசையும்புகன்மூலத்தான்மகாமுத்திரைமெய்யெங்குமாக்கி. (௪)

செய்யகிராத்தனைப்பாவித்துப்பின்சிருணபாத்திரத்திற்சாந்தஞ்
செய்யமலருறுநீருன்றுபுமுழந்தாள்சிரத்தளவுசெல்லத்தூக்கிச்
செய்யமூலம்புகன்றுதரிசனார்க்கியங்கொடுத்துச்செப்பல்வேண்டுஞ்
செய்யமனுக்கவசமூலஞ்சிலவென்றுரைத்திடுவர்தெளிந்துளோரே. (௫)

இலாடநடுச்செம்மைவிந்துவின்றிழியுநிலாவமுதமென்னவுள்ளிச்
சுலாவியத்திரத்தினாற்சோதித்தபாத்திரத்திற்றுரிசிலாது
நிலாவுகடோற்கத்தாற்கந்தோதகம்பூரித்ததனிகழ்சடங்கன்
குலாவுமூலத்தினாலர்ச்சித்தத்திரங்கவசங்கூறிக்கொண்டு. (௬)

முறைநிக்குப்பந்தமவகுண்டனஞ்செய்தேபின்னர்மொழிமூலத்தா
னிறையுற்றதேனுமுத்திரையுங்கொடுத்தந்நீர்கொண்டத்திரமிகழ்த்திக்
குறையற்றபொருணிலந்தன்மேற்புரோக்கித்துப்பின்குலவுமோர்பூ
மிறையற்றவத்திரத்தாற்பூசைத்தானத்திட்டுவிலக்கிடூறு. (௭)

செம்புமுதலாயவைநற்றண்டுலமற்றிவற்றொன்றாற்செய்தவெண்டோட்
டம்புயத்துத்துவாரவலந்தண்டியிடம்பிங்கலனீசத்தோர்கொம்பன்
வெம்பழலிற்குருநடுவிற்பிரபூதாசனமழன்முன்மிளிர்நாற்றிக்கிற்
பம்புவிமலன்சாரனாராத்திகன்பரமசுகனைச்சேர்த்து. (௮)

மற்றதன்மேல்வெண்பதுமமருச்சித்தப்பூருவமுன்வளரீசான
னுற்றதிசையீறுயகேசரத்திற்றீத்தைசூக்குமையொண்மேன்மை
பெற்றசெயைபத்திரைவிபூத்திநலவிமலையருள்பெறுமமோகை
சொற்றவித்தைதனைநிறுவிக்கன்னிகையீசானத்திற்றுலங்குமாறு. (௯)

சருவதோமுகியைவைத்துவிப்பிரமுத்திரைகொடுத்தத்தயங்கநாப்பண்
மருவிலர்க்காசனஞ்சேர்த்தத்திரத்தில்வெண்டாமரைசெம்மண்டலமாவெண்ணி
நறுவிரைமாதுளம்பூவிருவெண்டாமரையிருகைநயனம்வாகுப்
பெறுமளவத்துணைதவிமாமுகஞ்சிவந்ததுகிலாகப்பிறங்கக்கண்டு, (௧௦)

நிலவுகடோற்காயசூரியமூர்த்தியான்மூர்த்திநிசித்துமேலாற்
குலவுநேத்திரத்தானேத்திரமீந்துபூவொடுகைகூப்பிக்கொண்டு
கலவுறுதலின்றருணவிந்துமலருற்றதெனக்கருதிப்பின்னர்
நலவுபவிதயத்தாலேமூர்த்தியாவாகனமுன்னயக்கச்செய்து. (௧௧)

மன்னுதாபனஞ்சந்நிதானஞ்சந்நிரோதனமும்வயங்கச்செய்து
பன்னுவிம்பமுத்திரையீந்திதயாதித்தானத்திற்பகரவற்முன்
முன்னுபுகழ்பெறநிசித்துமுயங்குமேகத்துவமாமூலத்தாக்கித்
துன்னுதிக்குப்பந்தனமுந்துயவவகுண்டனமுந்நலங்கச்செய்து. (௧௨)

மொழிதேனுமுத்திரைமாமுத்திரையுந்திமிராரிமூலத்திந்து
பழியினமசுவதசுவாகாந்தகடோற்கத்தாற்பாத்தியமுன்னீந்தே
யழிவில்லவுசடர்தமூலம்பகர்ந்துதண்டுலம்பச்சறுகுசாத்தி
யொழிவில்கடோற்கத்தாலெண்ணெய்யாதிகைக்கொண்டாங்குள்ளத்தாட்டி. ()

செய்யவுடைபுனைந்துகந்தாதிகளணிந்துமூலத்தாற்சிறப்பமூன்று
செய்யமலராஞ்சலியுமருக்கியமும்பதுமவிம்பச்செம்மைவாய்ந்த
செய்யமுத்திரையுநல்கியிலயாங்கமருச்சித்துத்திகழ்போகாங்கஞ்
செய்யவனுமதிபெற்றேயிதயமுன்னுன்கிடத்துமவைசெப்பிவாங்கி. (௧௪)

முறையழலீசன்னிருதிவளிமூலையங்நான்குமுன்னிச்சாத்தி
நிறைகதிர்முன்விழிசாத்திக்கிழக்குமுதலத்திரமேநிரம்பச்சாத்திக்
குறைவிலிதயாதிக்கான்முத்திரைநேத்திரமதற்குக்கோவிடாண
மறைசெய்திராசனிவலியத்திரத்தினுக்கேந்திந்திரதிக்காதிநான்கில். (௧௫)

இதழ்நுதியின்மதிபுதன்பொன்வெள்ளியழன்முதனுன்கினியையச்செவ்வாய்
கதழ்சனியிராகுகேதுவைச்சாத்திவிளங்குநமக்காரமென்றுஞ்
சுதமறுமுத்திரையுமருக்கியமுநல்கிக்கதிரவற்குத்தூபதீப
முதவிநிவேதனந்தூநீரடைக்காய்தற்பணமாதியுநவிப்பின்னர். (௧௬)

உற்றவுபவிதயத்தாலாசமனமருக்கியநன்குதவிமூலஞ்
சொற்றமையுமருக்கியநன்னீரினொடுகதிரவன்முன்றேன்றவீந்து
பற்றமையங்கங்களுக்குந்தசத்திலொன்றுசெபித்தணிந்துபணிந்துபின்னர்க்
கற்றகடோற்கத்தினுற்பராமுகவர்க்கியங்கொடுத்துக்கனிந்துவேண்டி. (௧௭)

உம்படந்தவத்திரநாராசவுயர்முத்திரையாலொழிதராது
நம்பமைந்தவங்கமனுவாதியெழப்புரிந்துபின்னர்நலம்பராவு
வெம்புதலிறிவ்வியமுத்திரைகடோற்கத்தினுன்மிகயோசித்துப்
பம்பிதயமூலத்தாற்சிவ்வருணன்றனையொடுங்கப்பண்ணிப்பின்னர். (௧௮)

பொலிதருமீசானத்திற்றேசச்சண்டனைச்சாத்திப்பொற்புமேய
மலிதருமாலியஞ்சாத்திப்பூசைபுரிந்தொடுக்கியபின்வயங்குதீமை
மெலிதருமாசமனசகளீகரணஞ்செய்துபின்னர்வெண்ணீறெண்மை
வலிதருநெற்றியிற்புனைதல்வேண்டுமிதுகதிர்ப்பூசைமரபாமன்றே. (௧௯)

சூரியபூசாவிதிப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௭௧௭.

# சிவபூசாவிதிப்படலம்.

கண்ணியவாசமனஞ்செய்துசகளீகரணமுஞ்செய்துநீறணிந்து
புண்ணியவுருத்திராக்கமும்பூண்டுபூசைநற்றானத்தையடைந்து
திண்ணியபலபாத்திரமுமத்திரத்தாற்றிகழ்தருசுத்திநன்கமைத்து
நுண்ணியவவுசடந்தவிதயத்தைநுவன்றுவட்டகைப்புனனிறைத்து. (௧)

வழுவறுசாமானியவருக்கியத்தைவயக்குறுபிரணவக்கொண்டோ
டொழுதாமருச்சித்தெழுதாமபிமந்திரித்துப்பின்றிக்குப்பந்தனமுஞ்
செழுவியவவகுண்டனமுநல்லான்முத்திரையுநன்குதவிமேல்பாங்கர்க்
கொழுவியதுவாரத்தந்திரமறுவைக்கூறுபுபுரோக்கணஞ்செய்து. (௨)

மேற்படித்தென்பால்விநாயகன்வடபால்வெள்ளைமேனியனடுச்செய்யா
னேற்புறவிருத்தித்தனக்கொளிர்தென்பாலியைதரநந்தியையமைத்துப்
பாற்படுநந்திதனக்கிவைவடபாற்பஃறிரைக்கங்கைமற்றவடன்
மாற்படுவேட்கோடிக்கண்மாகாளன்மற்றவன்றெனுதுபால்யமுனை. (௩)

முறைபெறவிவைப்பூசித்தல்வேண்டுமுற்றுறுதெனிலனைவரையு
மிறைதபக்கூட்டியருச்சனைசெயலும்விதிதொழுதுடனிரீக்கணஞ்செய்
தறையுமேனோக்கியத்திரங்கூறியமைந்தநாராசமுத்திரையா
லுறைமலர்தெறித்தும்படந்தபாசுபதவத்திரமந்திரமுரைத்து. (௪)

பாதமுத்தாடனஞ்செய்துழைப்படியெனுந்தானத்துநாப்பட்
போதவத்திரதுவாரபாலனையொண்பூசனைபுரிந்துவாத்துபதி
நாதனைக்குருப்பிரகத்துணிருதிகுந்திசையுறும்படிவைத்துப்
போதநாற்சுத்திகும்பத்திற்கியற்றிப்பொலிதருமந்திரநீரால். (௫)

தோயவத்திரத்தைச்சுத்திசெய்திட்டுத்துறுபதநீர்வெயிற்படாநீர்
மேயமுன்றுணிர்விலக்குபுநன்னீர்விளக்கிதயத்தினல்வடித்துப்
பாயவன்பமையவெடுத்துமற்றனைத்தும்பாங்குறும்படியமைத்ததன்பின்
றீயமண்சிலைபுல்வேய்துக்கம்வியாதிதேசுதீர்த்திடலொற்கமுறலால். (௬)

புலியதன்முத்திதுகில்பிணிபோக்கும்பொலிகலைத்தோன்ஞானசித்தி
மெலிவில்கம்பளந்துக்கந்தபும்பலகைவிரும்பியதருமிவற்றென்றின்
மலியருளுருவச்சம்புவின்றென்பான்மதித்திருந்துயர்பூசைத்தான
நலிவிலத்திரமாமதிலினுட்கவசநவிலவகுண்டனத்துளாக்கி. (௭)

இருங்கரநியாசஞ்செயாச்சுழிமுனையையிரண்டுகோற்பெருவிரலொடுங்கி
யொருங்கியன்மூலாதாரத்தினளவுமோரிரண்டுருவமாவதன்மேல்
வருங்குணப்பிரமரந்தரமளவும்வயங்கொருருபமாவிதயம்
பெருங்களாமூலம்புருவமத்தியம்பிரமரந்தரமைந்தில். (௮)

றவலிருகலையோடளாவியதாக்கீழ்நோக்குதாமரையரும்போடு
கவலறக்கூடியிருப்பதாச்சத்திகதித்திடுதானத்தினின்று
மவமறவிழுமமிர்ததாலாயினுலகம்புறநனைந்ததாவெண்ணிப்
பவமிலுங்காரமிதயத்துச்சொலிக்கப்படுவதாப்பாவனைசெய்து. (௯)

அறைவளியிடப்பானுசியாற்பூரித்தமையக்கும்பித்துங்காரத்தி
லுறைசித்தம்வைத்துவளியைமேலெழுப்பியும்படுவச்சரிப்போடு
நிறைதருசோடிகாமுத்திரையினுனிலவைந்துதானத்துந்தெறித்து
மறைவில்கீழ்நோக்குமரும்புமேனோக்கிமலர்ந்தவாப்பாவனைசெய்து. (௧௦)

வளியினைவலப்பானாசியால்விட்டுவாயுவைமீளவுமிடப்பா
லொளிகெழுநாசிகொண்டுபூரித்தவ்வுணாத்தபூரகவளியாலே
தெளிதருமிதயமலரிருப்பவனாத்திக்குமுடிப்போலொளியினனா
வெளிதகல்சாந்தபீசமாமயனாவிதயசம்புடிதனாவின்றும். (௧௧)

மருவுமுங்காரசிகையிருப்பவனாவைத்துப்பின்பீசவிக்கிரக
னருவிலுங்காரசிகைக்கணன்புரியட்டகத்தொடேய்ந்தவனெனவெண்ணி
யொருவிலப்புரியட்டகமின்றுதிர்ந்தானொளிசெய்சூக்குமவிந்துபூதன்
கருதுமேகாங்கிராமயனாகக்கரிசிலான்மாவினையெண்ணி. (௧௨)

அடர்வளிதனைக்கும்பித்துமேலெழுப்பியான்றசங்காரமுத்திரையாற்
றொடர்தருமான்மமந்திரநவின்றுதோன்றவான்மாவினையெடுத்துப்
படர்பிரமாதிகழிந்துமேற்போகிப்பகர்பெருந்துவாதசாந்தத்தி
லிடர்தபுபரன்பாலின்பந்துய்ப்பதற்கேயியைந்தவனாகயோசித்து. (௧௩)

சத்தமும்பரிசமும்பிரமன்பாலிரதந்தண்டுழாயினான்றன்பான்
மெத்துருவமுங்கந்தமுமுருத்திரன்பால்விழைபுந்தியோடகங்கார
மொத்தவீசன்பான்மனமொடுவிந்துவோங்கியசதாசிவப்பிரான்பால்
வைத்தவிம்முறையேயொடுங்கிடச்செய்யவருமுடற்சூக்குமசுத்தி. (௧௪)

பொன்னிறங்கடினங்குலிசநாற்கோணம்பொருந்தியலகரமாம்பீச
மன்னியசாதமலரவனிவிர்த்திவாய்ந்ததாமவனியைவெண்மை
துன்னியநெகிழ்ச்சியகாரமாம்பீசந்தோடுசால்பதுமநல்வாம
மின்னியமாயன்பிரதிட்டைபிறையிவ்விதம்பொலிகின்றநன்னீர். (௧௫)

செம்மைவன்சுவத்திரகாரமாம்பீசஞ்செறியுருத்திரன்வித்தையகோரம்
வெம்மைமுக்கோணத்தழலையொண்கருமைவிந்துவோராறுகோணந்
தம்மைநேரில்லாமகேசர்நற்புருடஞ்சாந்தியாம்வளியைவான்றாம
மம்மையப்பீசஞ்சதாசிவஞ்சாந்தியாதீதமமிர்தவிந்தோடு. (௧௬)

வட்டமீசானமருவியவெளியைமருவுறவெங்குமாவுடற்க
ணிட்டநன்கமையவேறுவேறெண்ணியிடையினான்மறித்துமேனோக்கி
நட்டபிங்கலையான்விடும்பொழுதைந்துநான்குமூன்றிரண்டொன்றாவுரிமைப்
பட்டபீசத்தையிம்முறையுரைத்துப்பகர்தன்மாத்திரைகளையொழித்து. (௧௭)

நிலமறவிடத்துமறலழலிடத்துநிலவழலுறுவளியிடத்துஞ்
சலவளிவெளியினிடத்துநன்கொடுக்கிச்சரீரமவ்வவ்வடிவாக
நலமுறவெண்ணிநவையிலத்திரத்தான்குவலக்காற்பெருவிரற்றீக்
குலவுறவெழுப்பியதுகொடுசரீரகுற்றங்களனைத்தையுந்தகித்து. (௧௮)

சத்தியின்னமுதாலகம்புறநனைத்துத்தகுசித்தமாம்பதுமத்திற
பத்திமுக்கலையோங்காரத்தாற்சுத்தவித்தையாம்படர்தவிசாக்கிச்
சுத்திகொண்மேனாற்கலைப்பிரணவந்தாற்சூக்குமமெய்கொடுவைத்து
முத்தியைக்கலைசால்பிரணவத்தோடுமுனிவிலான்மாமனுநவின்று. (௧௯)

நிலவுபூரகத்தாற்றுவாதசாந்தத்துநின்றுமான்மாவினையெடுத்துக்
குலவுறவைத்துவவுசடந்தஞ்சார்குளிர்சத்திமந்திரங்கூறி
நலமிகுவிந்துத்தானத்தொள்ளமுதானயந்தபிடேகித்தபின்ன
ரிலகியவங்கநியாசஞ்செய்திடுகவிதூலதேகத்தின்சுத்தி. (௨௰)

தொகவிதயத்திற்சோதிலிங்கத்திற்றுவாதசாந்தத்தினின்றிறையை
நகவரவழைத்துமலர்முதற்கொண்டுநற்புறம்போலருச்சித்துத்
தகவுறுமுந்திக்குண்டஞானத்தீத்தயங்கவிந்தமுதிஹோமித்தே
யிகவிலப்பயனையாற்களித்திடுகவிஃதுயிர்ச்சுத்தியாம்பின்னர். (௨௧)

அகவில்பூசையெனப்புறத்தினுங்கொண்டருள்கவென்றநுஞைமுன்பெற்றுப்
பகலருந்தாளத்திரயம்வண்டிக்குப்பந்தனமாற்றியூறொழித்து
மிகவொளிரங்கிவன்னவத்திரத்தினெடுமதில்கோலுபுகவசத்
திகலரும்வலத்தற்சனியினுற்சுற்றியியையகழ்மூன்றெனக்கருதி. (௨௨)

தூயநற்சத்திமந்திரமின்றுசொலப்படுதேனுமுத்திரையா
லாயதெள்ளமுதமேலொடுமேழுமளாய்நிறைந்திட்டதாவெண்ணிப்
பாயபாத்தியமுற்பாத்திரமூன்றும்பகருமத்திரசுத்திசெய்தே
யேயவிந்தமுதநீர்வவுசடந்தவிதயமந்திரத்தினுலிறைத்து. (௨௩)

மருவுநாலாறெண்டிரவியமின்றேன்மலர்சந்தமறுகுதண்டுலமிட்
டொருவில்பாத்தியமங்கம்பிரமாங்கமுற்றவாசமனமர்க்கியந்தான்
பெருகுமாசனமொண்மூர்த்தியோடைந்துபிரமமற்றிவற்றருச்சித்து
வெருவிலம்மூன்றுள்விசேடமாம்புனற்குவித்தியாதேகமுஞ்சாத்தி. (௨௪)

தெரியநேத்திரமூலமுமிதயமுஞ்சிரமுஞ்சிகையுங்கவசமும்பி
ணரியவத்திரமூலமுஞ்சொலிமலராலருச்சித்துத்திக்குப்பந்தனமும்
பிரியமாறவகுண்டனமுஞ்செய்தேயான்பிறங்குமுத்திரையுநன்கீந்திட்
டுரியவத்திரத்தாற்றனைத்திரவியத்தையுஞ்சுசிசெய்தபினம்மா. (௨௫)

உணாகவசத்தாலப்பியுக்கணஞ்செய்தோங்கிதயத்தின்மந்திரித்தே
புணாவிலாவவகுண்டனஞ்செய்துதேனுமுத்திரைபொலிதரக்கொடுத்து
வணாநறுநீரின்மலமொன்றுநனைத்துமஞ்சனகும்பத்தினிட்டு
விணாதரத்தேனுமுத்திரைகொடுப்பமேயதுதிரவியசுத்தி. (௨௬)

உன்றுமாதனத்திற்சிவாதனமார்பிலொருசிவமூர்த்தியைச்சாத்தி
மூன்றுசாந்தநனுற்றிலதமிட்டொருபூமூலத்தாற்றலைமிசைவைத்து
மின்றுமாதேவபாவனைசெய்துவிளங்கிணாசுவந்தீர்க்கம்புலுதம்
பன்றுமோங்காரமாதியநமோந்தமுளமனுப்பயப்பயப்பகர்ந்து. (௨௭)

மந்திரசுத்திசெய்துமஞ்சனவேதிகையில்வண்கலையுறவிரித்துப்
புந்திசெய்நாப்பணனந்தனைச்சாத்திப்பொலிதரநாற்றிசையிடத்து
முந்தியதருமஞானநல்வைராக்கியத்தொடுமொழியைச்சுவரிய
நந்தியசாத்திப்பதுமமேற்சாத்துநகுசடுத்தாதனமிதுவால். (௨௮)

மொழியதினிலிங்கமிருத்தியாசனமேமூர்த்தியேமூலமேயிவற்றுற்
பழிதபுமற்றையங்கமோணாந்தாற்பகருமென்பூவருச்சித்துக்
கொழியருக்கியமீந்தெழுவிணாத்துபங்கோதறுதீபமுமீந்து
வழிமதுமலரத்திரத்தினுற்களைந்துவைக்கதண்டசற்கிசானம். (௨௯)

சுத்தநீரொண்ணெய்மாவரிசனமுற்றுகளிலாமலகமாவைந்து
சித்தநன்கமைமையந்தயிர்மானறுநெய்திருந்திளவெம்மைநீர்வில்வ
மொத்தகற்பூரம்பாறயிரின்றேனேண்கழைபல்கனிச்சாறு
மொய்த்தபல்லிளநீர்மூலத்தாலாட்டுமுகிழ்மலரிடையிடைச்சாத்தி. (௩௰)

நதியநீராட்டிப்புகைசுடர்வயக்கிநாவிருபூக்களுஞ்சாத்தி
யதியவன்ருச்சுப்புற்கவசத்தாலமைதரச்சாத்தியோராங்காற்
செறியமூலத்தாற்பதாகைகொண்டாட்டித்திகழ்தருசங்கிதைமனுவால்
வெறியபூநீர்பன்ரெருதரமாட்டிவியோமவியாபிமுன்மனுவால். (௩௧)

சகத்திரதாரையாட்டியொண்கந்தஞ்சாலுநீர்வேண்டளவாட்டி
மிகத்தழைதருசந்தனக்குழம்பாட்டிமிளிரொன்பான்கலசமுமாட்டிச்
சுகத்தியையந்தத்தருக்கியநறுநீர்தோமறவிதயத்திருட்டி
மகத்துவம்பொலியொற்ருடையிட்டணைமேல்வைத்தொருமலருறச்சாத்தல். ௩௨

ஈதுதானிலிங்கசுத்தியைங்கரனையெறிவளித்திசையினுங்கமலப்
போதுசாறிருவைவடக்கினுந்தென்பாற்பொலிமுகங்கொண்டிடச்சாத்தி
யோதுசீர்ச்சதாசிவப்பிரானனந்தனுற்றசீகண்டனம்பிகைசெந்
தாதுநேர்கந்தன்விட்டுணுபிரமன்றக்கவீசத்துறச்சாத்தி. (௩௩)

ஆதிபீடத்தின்கீழிடத்துறவாதாரசத்தியையுமற்றதன்மேற்
சோதிசாலனந்தாசனத்தையுமதன்கட்டுலங்கனந்தனையுநன்கமைத்து
நீதிசாலிம்முக்கோணத்தின்மேலானிலவழற்கோணமுன்னான்கும்
பூதிசாறன்மாதிகளதன்மாதிபூர்வமுன்னான்கினுஞ்சாத்தி. (௩௪)

மற்றதன்மேலான்மேகலைக்கிழான்வருநிருதித்திசைக்கண்ணே
யிற்றெனுமதச்சதனத்தைமற்றதன்மேலீசத்தூர்த்துவச்சதனத்தைச்
சொற்றிடச்சாத்தியிருசதுர்ச்சிங்காதனநடுத்தூயதாங்கந்தஞ்
செற்றநற்பீசமங்குராநாளஞ்செறிதரச்சாத்தியபின்னர். (௩௫)

ஆயபத்திரத்திற்றளத்தினைச்சாத்தியந்தமாத்தலத்தின்மூலத்தின்
மேயபீடத்தின்மீதுகேசரமுமேலுன்னதத்துமத்தியத்தும்
பாயகன்னிகையும்பீசமுஞ்சாத்திப்பதுமமாமாசனஞ்சாத்தித்
தூயவெண்கோணவாசனமேலாற்ருெக்ககேசரத்திடையம்மா. (௩ )

பூருவமுதலீசானத்தினளவும்பொருந்தியவாமைநற்சேட்டை
சாருமாவிரவுத்தரிவளர்காளிதருகலவிகரணியெவரு
மோருமோர்பெலவிகரணியெஞ்ஞான்றுமொளிர்பெலப்பிரமதன்னியொடு
தேருமாசறுவபூததமனியுஞ்செறிதரச்சாத்தியபின்னர். (௩௭)

இலிங்கமூலத்திற்கன்னிகையீசத்தெழின்மனோன்மனிதனைச்சாத்தி
நலிந்திடாவட்டப்பதுமபீடிகையாநயந்துளத்தெண்ணியபின்ன
ரலங்கிதழ்நுதிச்சுற்றிரவிமண்டலமுமதிபதியயனையுஞ்சாத்தி
யிலங்குகேசரத்துநுதிவட்டமதிமண்டலமிறைமாயனைச்சாத்தி. (௩௮)

கன்னிகைவட்டநுதியழலாயமண்டலங்கருதுருத்திரனைக்
கன்னிகைநாப்பண்சத்திமண்டலத்தைக்கருத்தனுகியமகேச்சுரனை
மன்னியசாத்தித்தவாவறுகோணமருவியபீடமீதின்வன்
மன்னியமேன்மைச்சிவாதனமெண்ணிவயங்குறச்சாத்தியபின்னர். (௩௯)

செறியழற்றம்பரிகர்சிவமூர்த்திதிகழ்குறிவட்டத்திற்சாத்தி
யறிசிரமாதிபதாந்தந்தண்டபங்கியவிரீசானுதியானிசித்து
முறிவிலீசாதிமுடிக்கண்ம்மனுவான்முண்டபங்கியையினிதமைத்து
நெறியமைபடிகம்பொன்னிறங்கருமைநிகழ்செம்மைவெண்மையைந்நிறமாம். ()

மன்னுமீசானம்புருடமகோரம்வாமஞ்சத்தியோசாதம்வதன
முன்னுதண்பிறைசேர்சடைமுடியைந்தைம்மூன்றுகண்டிருக்கரம்பத்து
மின்னுவேல்வாள்சூலங்கட்டுவாங்கம்விளங்கியவரதமோர்வலப்பாற்
பன்னுதாடிமர்தமருகம்பாம்பங்கெடாநுநீலம்பற்றிடப்பால். (௪௧)

அமைதாக்கொடுவெண்சிலைநிறம்பங்கயாசனமாவதாலோடு
சமைதரவெண்ணிவித்தியாதேகந்தழைதரமற்றதுமின்போற்
அமைகொள்பூவஞ்சலிக்குளானதுவாத்துணிந்துமூர்த்திக்கணேசாத்தி
இமையவர்புசமுமோனாந்துமுகத்துமியைதரநேத்திரங்கொடுத்து. (௪௨)

இருகரநிறையமலர்கொடஞ்சலிசெய்திடைதரமேலைதமுனிவொட்
டொருவறநிறைந்தாதவன்பொருமூலமொலிகெழுபூரகத்தோடு
வெருவருந்துவாதசாந்தத்தினளவுமேதகவமையவுச்சரித்துப்
பொருவருஞானனந்தமாஞ்சிவத்தைப்புகல்கோடிமதியொளியாக. (௪௩)

எண்ணிமற்றிறைக்குவிந்துவினின்றுமியைந்தபுட்பாஞ்சலியுள்ளா
னண்ணியதாக்கிவிதயத்தான்மூர்த்திநகவொளிர்பிரமாந்தரத்தே
திண்ணியவாவாகனஞ்செயாவிதயஞ்செறிதரத்தாபனஞ்செய்தே
யண்ணியமற்றையிரண்டுஞ்செய்திடுகவவ்வமுத்திரையினுன்மாதோ. (௪௪)

வினவிநல்வரவாருள்பெறீஇனின்னமேதகப்பூசைசெய்யளவு
மனகவிவ்விலிங்கநீங்குறுதமர்தியண்ணலேயெனநனிவேண்டி-
மனனமர்சுவாகாவருக்கியங்கொடுத்துவளவிதயஞ்சிரஞ்சிகையே
கனமிருகவசமத்திரமுன்னிக்கராந்தமுன்னிசித்திடல்வேண்டும். (௪௫)

மூலநன்குறாத்தேகத்துவஞ்செய்துமொழிதிக்குப்பந்தனமாற்றிச்
சாலநல்லவகுண்டனஞ்செய்துபரனேர்தக்கவான்முத்திரைகொடுத்துச்
சீலமார்மகாமுத்திரைபஞ்சமுகமுத்திரைகொடுத்தேநமாசுதாசி
சேலவாய்சுவாகாவென்றுபாத்தியமுனியையமூலத்தினுற்கொடுத்து. (௪௬)

மொழியதுசரிசிமலர்வவுசடந்தமூலத்தான்முடிமிசைச்சாத்திச்
செழியிதயஞ்சேர்மூலத்தாற்றுபந்திபநன்கியைதரக்கொடுத்துப்
பழியிலாசமனமருக்கியநல்கிப்பாவனையாட்டுதல்செய்து
வழியருக்கியமுமாட்டிப்பாத்தியமுன்வரையொருமூன்றுநன்கீந்து. (௪௭)

மேயவொற்றுடையிட்டுச்சந்தரிசிவிளங்கியதுர்வைகூவிளம்பூப்
பாயபூறுடைபூணுநூலாதிபரித்திடச்சாத்தியபின்ன
ராயமுத்தத்துவாதியர்தத்திலஞ்செழுத்தோதுபுமூன்று
றாயமென்மலரஞ்சலிசெய்தருட்டித்தொடையின்டைமுதலியவணிந்து. (௪௮)

சூட்டுபுமணியத்திரத்தனுபாதியளித்துநன்முகமுடியைந்தி
னூட்டுமாசமனமருக்கியங்கொடுத்துமனோரதமுத்திரைநல்கிக்
காட்டுமைம்பிரமமங்கமோராறுங்கருதிலயாங்கத்தர்ச்சித்தே
மூட்டுபோகாங்கமருச்சனைசெய்யமுழுமுதலனுமதிபெற்று. (௪௯)

மூலமந்திரத்தாலருச்சனைசெய்துமுடியிலீசானந்தற்புருடங்
கோலமாரிதயங்குய்யத்தினகோரங்குலவுவாமம்பதாதிகளின்
மேலமர்சாதம்வாங்கியீசானம்விளங்கியபூருவந்தெற்கு
ஞாலமைவடக்குமேற்குறுதளத்தினென்மையம்மனுக்கொடுசாத்தி. (௫0)

நேத்திரநின்றுநேத்திரம்வாங்கிநிலவுமீசானற்குத்தரத்துச்
சாத்திமற்றிதயமிதயத்துவாங்கித்தழலவன்றிசையிடைச்சாத்தி
வாய்த்தநற்சிரத்திற்சிரங்கொடுநயனம்வடக்கிற்சாத்துபுநிருதிக்கட்
சாய்த்தவன்சிகையையதினின்றும்வாங்கிச்சாத்திடவேண்டும்பின்மாதோ. (௫௧)

கவசமெவ்வுறுப்புக்களினின்றும்வாங்கிக்கலப்புறவாயுவிற்சாத்தித்
துவசவண்கரத்தினத்திரம்வாங்கித்தொக்கபூர்வாதிநான்கிடத்து
மவமறச்சாத்தித்தற்புருடாதியிடப்பாகத்தாவாகனாதி
நவமுறுபாத்தியாதிநன்மலரானலங்கவர்ச்சனைசெயன்மரபால். (௫௨)

பாவனையெனிலர்க்கியமதுகொடுத்தேபகர்தருதேனுவண்பதுமந்
தாவருஞ்சூலமகரியொண்சிருக்காச்சாற்றிடுமைந்துமுத்திரையை
மேவருமீசானாதிகட்கிந்துவிழைநமக்காரமுத்திரையை
யோவருமங்கம்பெறவளித்தானுக்கொள்ளியமூலமந்திரத்தால். (௫௩)

வழிமதுமலரஞ்சலிகொடுத்ததன்பின்வயங்குமாமுத்திரைகொடுத்துப்
பழியிலீச்சுரரோடிவரேகமொன்றுபாவித்துப்புகைசுடர்கொடுத்துக்
கொழிசுவையாசமனமருக்கியமுங்கொடுத்தபின்பலநிவேதனமு
மொழிவறமிளிர்பொற்கலத்துறவேற்றியொத்தநாற்சுத்தியுமாற்றி. (௫௪)

ஒருசுவாகாந்தமூலமந்திரஞ்சொற்றுயர்பிரமாங்கத்திற்கியைய
மருவவெவ்வேறுநிவேதியின்றென்னில்வயங்கொருபாத்திரத்தளித்துக்
கருதுமாசமனமீந்துகைதுவட்டிக்கமழடைக்காய்வாசமளித்துப்
பெருகருக்கியமீந்தருச்சித்துத்தூபதீபமும்பிறங்குறநல்கி. (௫௫)

மேயவாசமனமருக்கியங்கொடுத்துமிளிர்சருவதத்துவாதிபதி
யாயமந்திரத்தாலறுகுமுற்கொண்டேயணிகெழுபவுத்திரஞ்சாத்திப்
பாயநாற்சுத்திபுரிந்துகற்பூரப்பரவுமாராத்திகஞ்செய்து
தூயசுவாகாந்தகவசத்தாற்கீழ்மேலுறமும்முறைச்சூழ்ந்து (௫௬)

தூயவாசமனமருக்கியநல்கித்துலங்குநீருடிவண்கவிகை
யேயசாமரையால்வட்டமற்றிடையில்டையிலாசமனவர்க்கியத்தோ
டாயமூலத்தாலுபசரித்ததன்பினமைந்தவீரொண்கலைமூல
மேயநற்சிறப்பினியம்பியேயிருகைவிளங்குபுட்பாஞ்சலிநல்கி. (௫௭)

முன்னியமகாமுத்திரையொடுபஞ்சமுகமுத்திரையுமன்பிற்கொடுத்து
மன்னியமலர்கையிதயத்தாற்கொடுகண்மணிவடம்வலக்கையினெடுத்து
மின்னியமூலநூற்றெட்டுக்கணித்துவிளங்குமத்திரங்கவசத்தாற்
றுன்னியதிக்குப்பந்தனமவகுண்டனமிவைதுகளறச்செய்து. (௫௮)

இதயசம்புடிதமாய்வலக்கையினிடக்கையினமர்மலர்வாங்கிப்
பதமிகுமருக்கியப்புனலேற்றுற்பவமெனுமுத்திரையோடு
கதமறமுழந்தாணிலத்திடையூன்றிக்கரிசறுசெபங்கன்மமான்மா
மதமறமனைத்துமாலயற்கரியவள்ளலார்மலர்க்கையிலளித்து. (௫௯)

அறைபிரமாங்கத்தினுக்குஞ்செய்திடுகவதிற்பத்திலொன்றுறச்செபித்து
முறையழற்றிசையிற்றன்குருமூர்த்திமுனிவறவருசித்தங்கதனிற்
பிறைமுடிச்சிவனைப்பூசித்தியோகபீடம்வித்தியாபீடமேற்கி
னிறையவர்ச்சித்தஞ்சலிமலர்முக்காலிகழ்த்துபுதுதிசெய்துசூழ்ந்து. (௬௦)

வலஞ்செயவொழிந்தான்பூசையின்பயனைமருவுருஞ்சிரங்கன்னங்காது
நலஞ்செயுமுகம்வாய்செங்கையோரெட்டிருகுபுவிதோய்தரத்தாழ்ந்து
குலஞ்செயுமிரண்டாங்காலமும்போற்றக்குறிக்கொளவலியிலையென்னிற்
புலஞ்செயாசனமாதியவொருமூன்றுற்போற்றலும்விதியெனப்புகல்வார். (௬௧)

புந்திசெய்பிரமகோத்திரமங்கம்பூசிபோகாங்கத்துங்கணித்த
சந்தியென்னுமுபாயகற்குவிண்ணப்பந்தகச்செய்தோமஞ்செயும்பொருட்டு
நந்தியயாகசாலையையடைகாருமதிகாரமின்றென்னின்
முந்தியவட்டபுட்பத்தானுதன்மொழிபிரமாங்கத்தானுதல். (௬௨)

சாத்துபுபராமுகவர்க்கியங்கொடுத்துத்தகுதியிற்பூசனைமுடிக்க
வோத்தியையதிகாரிவலியின்றென்னிலோமத்தினொருபதின்மடங்கு
வாய்த்திடச்செபித்துவள்ளலுக்களித்துமாண்புறுபூசனைமுடிக்க
வேத்துவல்லபத்தோடினியசம்பத்துமெய்தினனனுமதிபெற்று. (௬௩)

ஔருக்கியத்தோடக்கினிமேற்குக்கிழக்குறுகுண்டந்தானன்றிப்
பளிறண்டிலந்தானொன்றினுத்தரந்தான்பழிதபுபூர்வந்தானோக்கி
வளமலிகுண்டந்தனக்குநாற்சத்திவயக்குபுகன்னமேமேன்மை
யுளவவகிரணம்பூரணஞ்சேருமசமீகரணஞ்சேசனமே. (௬௪)

பாடுகுட்டணஞ்சம்மார்ச்சனஞ்சமாலேபனமெனவுரைசெயுமெட்டு
நாடுதர்ப்பையினல்வாளினற்குண்டநடுக்குசையாலத்திரத்தா
லீடுகொண்டிபூர்வத்துமூன்றிரேகைகீழ்வடக்கொன்றுறக்கீறி
யிடுகவசத்தப்பியுக்கணமாற்றியெச்சஞ்செய்ததாகப்பாவித்து. (௬௫)

மேயமற்றதன்மேலிதயத்தாற்கூர்ச்சவிட்டரமிட்டுடல்பசந்தா
ளாயவோர்முகத்தாள்பதுமமுக்கண்ணுளணியுடைமாலிகைபூண்டா
ளேயவுலகிற்காவிருதான்காகிரீர்படிந்தவளெனவெண்ணித்
தாயவாகீச்சுரியையவன்மூலஞ்சொல்லியாவாகனஞ்செய்து. (௬௬)

வலக்கரத்தபயங்கூர்ச்சமற்றிடக்கைவயங்கக்கமாலையொள்வரதம்
விலக்கரும்வாகீசனாயவர்மூலம்விளம்பியாவாகனஞ்செய்து
நலக்குமற்றிருவர்வடிவமும்விந்துநாதமென்றெண்ணியர்க்கியமீந்
தலக்கருணெல்கோலாதியினழற்றுணுத்தமமாளிகைபழற்றுன். (௬௭)

தூயபாத்திரத்துவாங்கியோர்சகலந்தொக்கதென்மேற்கினத்திரத்தாற்
பாயவூறகலவிட்டோரற்சுத்திபண்ணித்தீமூலமந்திரத்தா
லாயசங்காரமுத்திரையாற்பூரகத்திடையாலழல்வாங்கி
மேயகும்பகத்தாலுந்தித்தீவிந்துமேயதீயொடுமுறப்பொருத்தி. (௬௮)

மருவிரேசகபிங்கலையினுற்றூய்மைமருவியபாத்திரத்தழற்பாற்
குருவழற்சைதன்னியமனுவாலொண்கொத்தன்னவங்கிபீசத்தை
வெருவினற்பவமுத்திரையினுலொருமைமேவுறவைத்துச்சங்கிதையாற்
பொருவிலர்ச்சனைசெய்தமலன்வீரியமாப்புந்தியிற்பாவனைசெய்து. (௬௯)

மன்னியவாகீசுரிகருப்பத்தவ்வரதராச்செல்வதாவெண்ணித்
துன்னியவிடைபூருழித்துமூலத்தாற்றூயகேத்திரத்துத்தாபித்தே
யுன்னியதேவிக்கிதயத்தாற்சவுசாசமனமுன்வத்திரமுதவி
முன்னியசாதாதியைந்தினர்ச்சித்துமூலத்தைந்தாகுதியீந்து. (௭௦)

பூருவமாதிவடக்கந்தமயன்மால்புகலரனனந்தனைச்சாத்தி
னேருமுற்றிசைமுனெட்டினுந்தெய்வஙிருபன்முனெண்மனாச்சாத்திச்
சாருமீசானம்பிரமனேனிருதித்தடந்திசைமாயனைச்சாத்தி
யாருமிவ்வெழுநாச்சிசுவினையோம்பியிடுகெனவிண்ணப்பஞ்செய்து. (எக)

சுடுதழற்கொருபேர்சிவத்தழலென்றுசொல்லித்தாய்தந்தையைவிடுத்துக்
கடுமிடற்றிறையையழலிரதயத்துக்கனியமுன்போலருச்சித்துப்
படுநெய்யென்னமுதத்தானிவேதனந்தான்பண்ணுமப்போதுமாமூலம்
வடுவறப்புகன்றுசிலபுரிந்தோமம்வருபிரமாங்கத்திற்கப்பால். (எஉ)

மூலவாகுதியிற்பத்திலொன்றேமமுடித்துப்பூரணாகுதிசெய்து
சாலமாநிவேதனப்பொருட்டோமஞ்சருவிற்செயாவவுசடந்தஞ்
சீலமார்பூரணாகுதிக்காகுந்திகழ்சுவாகாந்தமுமாகுங்
காலமாரோமத்தினுக்கெனக்களைவர்கரிசிலாகமங்களைகண்டோர். (எங)

ஆன்றவாசமனஞ்சந்தனந்தாம்பூலாதியீந்தெண்மலர்சாத்தித்
தோன்றவண்பராமுகவர்க்கியங்கொடுத்துத்தூயதீயிறையையொண்கோசஞ்
சான்றநஞ்சிவன்பால்யோசித்துமூலஞ்சாற்றிநாலாகுதியாற்றி
யென்றநற்பிரமாதிகட்குநற்பலியையிடன்முறையென்பர்கற்றுணர்ந்தோர். (எச)

முன்னியபிரமாதியர்தமையொடுக்குமுறைமையிலொடுக்குபுதனக்கு
மன்னியதெற்கின்மண்டலமிரண்டுவயக்கிமற்றவற்றுண்முந்தியதி
லுன்னியகிழக்குமுதற்றிசைநான்கிலுருத்திராளிசெய்மாதாக்கண்
மின்னியகணங்களியக்கர்சாதிமிளிர்திசைநான்கினுமாதோ. (எரு)

கிரகம்வாளவுணரரக்கர்மாநாகர்கேழ்கிளர்மண்டலநடுவி
லிரவிலீசத்திலுடுக்களக்கினியினிராசிகணிருதியில்விசுவம்
பரவுகால்வருணனிவர்நடுவாகப்பண்புசால்கேத்திரபால
னுரவுறவமைத்துப்பலியருக்கியமுமுறுசுவாகாந்தத்தாலுதவி. (எசு)

இந்திரன்முதலாமெண்மர்கடம்மையேனைமண்டலத்திலெண்டிசையு
நந்தியவயனையீசத்துமரியைநகுநிருதித்திசையகத்து
முந்தியநீலலோகிதர்தம்மைமுழங்குமற்றதனடுவகத்தும்
புந்திசெய்தமைத்தேயருக்கியங்கொடுத்தும்பொலிதருமுருத்திராதியர்க்கும். ()

பலியளித்தாசமனமருக்கியமும்பண்புறக்கொடுத்துவச்சிரக்கை
வலிகெழுமகவான்முதலியர்தமக்குமற்றவைநல்கிப்பின்புறத்திற்
கலிகொடியாதிசமயபேதிகள்வன்கடுந்தழல்வாத்துதேவதைக்கு
மொலியவாமனுவாலுறுசுவாகாந்தத்துதவிவண்பலியுளத்தொடுக்கி. (எஅ)

மண்டலமிரண்டற்கேருத்திராதிமனுவினூட்டலகோரமுமாங்
கண்டவிவ்வாறுசெய்யெதுசெயினுங்காயவர்மனுவகத்தாக்கி
யண்டவாயாமஙியாசமுமாற்றியருக்கியத்தோடாற்சார்ந்து
கொண்டவப்பலனைச்சிவாகாந்தமூலங்கூறியவ்விறைவலக்கரத்தில். (எகூ)

செழியருக்கியத்தோடாயவுற்பவமுத்திரையினிந்தெண்மலர்சாத்தி
மொழியுமைமுகமுத்திரைநல்கிச்சாதமுதலைந்துமுடிக்கண்மூலத்தாற்
கொழியருச்சனைசெய்தருக்கியமீந்துகுலவுபோகாங்கமாமவைக்கு
மழிவிலத்திரமுனீசானமிறுதியருச்சித்தர்க்கியமுறக்கொடுத்து. (அ0)

அத்திரமலர்காராசமுத்திரையாலவிர்தருமந்திரமெழுப்பிச்
ஸித்திசெய்மூர்த்திமனுவிற்றிவ்வியமுத்திரைமலரானடுத்தவர்க்கு
முத்திசெய்மூர்த்திதன்வில்யோசித்துமூலத்தர்ச்சித்தருக்கியமீந்
தித்தலத்தடியேன்பிழையெலாம்பொறுத்தியென்றிரந்திரந்துறவேண்டி. (௮௧)

திக்குப்பந்தனமுமவகுண்டனமும்பின்செய்துகோமுத்திரையீந்து
பங்குவிள்ளாதகுருமுதலோர்க்குப்பராமுகவருக்கியநல்கி
நக்குயர்சண்டன்றன்னையாசனமுனவின்றுமூலத்தினுற்சாத்தி
மிக்குயர்பரமன்புனைந்ததன்பதமுன்விளங்குறமூலத்தாற்கொடுத்து. (௮௨)

தனிசெபித்தளித்தென்பிழைபொறுத்தருள்செய்சாமியென்றிரந்தருக்கியமீந்
தினிதுறவொடுக்கமுத்திரைமூலத்திதயதாமனாமலரமைத்துப்
பனியருக்கியத்துநிலைபெறுமனுவைப்பண்புறவெழுப்பிவைத்திதயம்
புனிதவாசமனஞ்செய்துநீறணிந்துபுகலுகவகோரமோர்ந்தே. (௮௩)

தூயபாற்கடலிற்றோன்றியநந்தைசுபத்திரைசுரபிசுசீலை
மேயநற்சமனையிம்மனுவோதிமென்மலர்கொண்டருச்சித்துப்
பாயபுல்லாதியளிப்பதுகவர்ந்துபார்முழுதளித்திடுந்தாயே
யாயவென்பணிகொண்டருளெனப்போற்றலமைந்தகோபூசையென்றுரைப்பார்.

பொருந்தவிவ்வண்ணம்பூசைசெய்தவத்தர்பொலியவாவாகனஞ்செய்து
திருந்தபிடேகஞ்செய்வதேவிசேடச்சிறப்பெனும்பற்பலாகமங்கண்
மருந்திறுமினியசிவபெருமானைவழுத்தியப்படியருச்சிப்போர்
கருந்துழாயவனுமயனுமுறுப்பக்கமழ்சிவானந்தந்துய்த்தமர்வார். (௮௫)

சிவபூசாவிதிப்படலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் ௧௮௦௨.

## போசனவிதிப்படலம்.

கதிரவனுச்சிமேயகாலையாற்றனுட்டானந்தான்
பிதிர்வறமுன்புசெய்யாவிடினதுபிறங்கச்செய்தே
யதிர்தலின்மூன்றுங்காலமருச்சிக்கும்வலியில்லாதார்
விதிரறவெண்பூமுன்பேவிழைந்துசாத்திடுதல்வேண்டும். (௧)

பூசையிவ்வாறுசெய்தபுண்ணியன்சிவபிரானை
மாசையில்கோயின்மேவிமாட்சியிற்சேவைசெய்து
தேசைமிக்கடையக்கைகால்கழுவியாசமனஞ்செய்தே
யோசைகொளிருநியாசமுறப்புரிந்திடுதல்வேண்டும். (௨)

குணதிசைபார்த்திருத்தல்குறிசெய்போதகனுக்காகும்
புணர்தருதெற்குநோக்கல்புகனிருவாணிக்காகு
மணமுறவடக்குநோக்கன்மாண்பமைவிசேடிக்காகு
மணவுறமேற்குநோக்கலமைதருசமையிக்காமால். (௩)

அறைதருகிழக்குத்திக்கியாவர்க்கும்பொதுவேயாகு
முறைதருசாதகர்க்குமொழிவடமுகமுமாகுங்
குறைதருமற்றையோர்க்குப்பச்சிமங்கோடல்கூடு
மிறைதருசெய்யநன்னூலியம்பிடும்விதியீதாமால். (௪)

அருந்தவந்தீக்கைசாதியாயவையொத்தாரோடு
திருந்தவங்கொருவர்தம்மையொருவர்தீண்டாதிருந்து
பொருந்தவோர்பந்தியாகிப்பொலிதருசடிலமில்லா
ரிருந்தலைக்கட்டுநீத்துமுழந்தாண்மேலிடக்கையூன்றி. (௫)

இழிநரைநோக்கிடாமன்மோனமாயிருந்துகொண்டு
மொழிதருகோமயத்தான்முழங்குறையாறுநீவி
யொழிவருமொருநால்வர்க்குநான்குமூன்றிரண்டொன்றாகப்
பழிதபுமிரோகைநல்லான்சுதையினாலிடுதல்பண்பாம். (௬)

அதவரசெருக்குச்சாதியாம்பலாமணக்குத்தான்றி
யிதமிலாச்சுரையாருழையிணர்கொள்கிஞ்சுகமேதேக்கு
பதமில்செங்கொட்டைவேங்கைபசுமகிழ்மணமந்தாரை
முதலியவாகாவென்றுமொழிந்தனசிவாகமங்கள். (௭)

ஏற்றபொற்கலம்விசேடமிரசிதகலமுநன்றா
லாற்றவுந்துலக்கியேழ்காலகோரத்தான்மந்திரித்த
போற்றமைவெளியகஞ்சக்கலமுமாம்புகல்செம்பாதி
சாற்றலுமுண்டாமென்றுசாற்றுவ்வொருசாராரே. (௮)

தலைவிரியரம்பையீன்றதண்டுரியாதநாய
விலையறுவாய்வலப்பாலியைதரவிடன்மாண்பாகு
நிலைகெழுபதுமம்புன்னைநீண்டபாதிரிவெட்பாலை
மலைவறுபலாசுஞூதமனூகமுற்பலம்பலாவே. (௯)

சண்பகங்கடம்புபூகந்தகச்சுத்திசமைக்கினாகும்
பண்பமைநல்லானெய்யாற்புரோக்கணம்பண்ணிமேலா
லொண்படுதன்னாற்றன்னையொப்பானாற்சிவனுக்கென்றே
நண்புறவமைத்தவன்னநகுகலங்கொடுபடைத்து. (௧௦)

முன்னமேநறியுப்பாதிகையினான்முகந்திடாமற்
பின்னமிறெறுவிகொண்டுபிறங்குறப்படைத்தல்செய்து
மன்னநன்காயவுந்திமந்திரத்தாற்புரோக்கித்
துன்னரும்வவுசடந்தவொருமிருத்திஞ்சயத்தால். (௧௧)

அறைதருவிதியினேழ்காலபிமந்திரித்தபின்ன
ரிறையவனாசான்வெவ்வேறினிதுகொண்டிடநிவேதித்
துறைவலப்பான்மயத்தானொளிரமண்டலமொன்றிட்டு
முறையினத்தலத்தேயற்பவன்னமூவிரலால்வைத்து. (௧௨)

அங்கைநீரோற்றுநாகனாதியவைவர்க்கூறித்
துங்கமார்கனிட்டைதன்னாலுகுத்தெஞ்சுந்தோயநீரைப்
பங்கமிலீசானத்தாற்பண்புறவளைத்தபின்னர்ப்
பொங்குநற்புருடங்கூறிப்பொற்புறப்பருகல்வேண்டும். (௧௩)

வேறு.

பற்றியிடப்பாணிநுகர்பாத்திரத்தையுண்பவெலா
நற்றழலாகுதியாகநயந்தேயத்திரமனுவான்
முற்றுதராக்கினியெழுப்பிமொழிபிராணாகுதிக்குச்
செற்றுபற்றேயாதிடுதிகழ்மிருகமுத்திரையால். (௧௪)

உள்ளியமைகொம்மட்டியுறுகோவைபிக்குருக்காய்
வள்ளிவயங்குறுபசளைமாறுவெண்கத்தரிக்காய்
புள்ளிபடுபல்சுரைக்காய்புகலத்திக்காய்முதலாத்
தள்ளிவிதித்தனவருந்திக்கோகனமுத்திரைசமைத்தே. (௧௫)

மருவியநன்னீரருந்திமாமனையின்புறம்போந்து
பொருவறவெண்ணிருகானீர்வாயுமிழ்ந்துபொருந்தவி
யொருவறயாவையும்புரிந்தேயாசமித்தொள்ளியவலக்கை
யிருவியரோங்குட்டத்தியைவலத்தாள்விரற்பெய்து. (௧௬)

இருந்துசுசியுறவெண்ணீறிடுபரிகைமுத்திரையாற்
பொருந்துதாந்தடவியிருநியாசமும்பொற்புறவாற்றி
வருந்துதரீரகோரமனுநாரேருதிமௌனம்விட்டே
யருந்தடைகாய்பின்சுசிசெய்தாசமித்துநியதியனாய். (௧௭)

மன்னுமடியவர்களொடுமாதேவன்சரிதமெனு
முன்னுபுராணம்பலவுமொழிதரவொண்பொருளாய்ந்து
பன்னுசிவானந்தமுற்றுப்பயின்றிடுதன்முறையாகுந்
துன்னுகதிரவன்மேல்பாற்றொடுகடல்போய்விழுமளவும். (௧௮)

போசனவிதிப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௮௨௦.

# சிவாலயதரிசனவிதிப்படலம்.

கதிரவனொடுங்குங்காலமிரண்டரைக்கடிகையென்ன
வதிர்புனலமையுந்தானமடைந்துமெய்ச்சுத்திசெய்தே
முதிரனுட்டானஞ்செய்துமொய்த்தகண்மணியும்பூண்டு
பிதிர்தலிலன்புவாய்ந்துபிறங்குவார்குழாத்தினோடும். (௧)

தெங்கங்காயரம்பையீன்றதீங்கனிநறுங்கற்பூரந்
துங்கமாரடைகாயேனுங்கிடைத்தனக்கனிகளேனும்
பங்கஞ்சாராதுகொண்டுபரமனாலயத்திற்செல்க.
வங்கவையரிதேன்முற்றத்தமைதருநராலொழிக்க. (௨)

இனமறைபுகழுந்தூலலிங்கமென்றுரைக்கப்பட்ட
கனககோபுரமுற்றூழ்ந்துகனிந்தசிந்தையினுட்புக்குப்
பனகபூடணவேரம்பப்பண்ணவன்பாதந்தாழ்ந்து
மனனமர்நந்திப்புத்தேண்மருங்கடைந்திறைஞ்சல்செய்து. (௩)

அடியனேன்சிவபிரானைச்சேவிப்பானணைந்தேன்றீமை
கடிதரும்விடைகொடுத்துக்கடைக்கணித்தருளுகென்று
படியறவிரந்துவேண்டிப்பயத்தொடுபத்திமேவ
முடியநீபோய்வாவென்றுமொழிந்தருளியதாவெண்ணி. (௪)

இருகரங்குவித்துட்புக்காங்கிலங்குநின்றுமையர்
பொருவில்குஞ்சிதத்தாள்போற்றிப்புண்ணியச்சிவபிரான்முன்
மருவியங்காதிசைவன்மலர்க்கையினனைத்துநல்கி
யொருவறவவனியான்செய்யுமுபசாரமனைத்துநோக்கி. (௫)

நிறையருட்பாடலாகிநிரம்புதேவாரம்யாரு
மறைதிருவாசகஞ்சீரமையிசைப்பாபல்லாண்டு
குறைதவிர்புராணமின்னகொண்டுறத்துதித்தல்செய்து
மறைபுகல்விபூதிமேனிவனைந்திருகையாலேற்று. (௬)

சிறிதகன்றணுவுமண்ணிற்சிந்திடாவகைதரித்துக்
குறிதருசோமாஸ்கந்தர்குரவனுயமருமையர்
செறிபுகர்முகத்தேரம்பர்சேவலங்கொடிப்பிரானர்
முறிவறுமிவரைப்போற்றிவலஞ்செயன்முறைமையாமால். (௭)

இருகரசலனநீக்கியியைதரக்குவித்துக்கொண்டு
பொருவரும்பெருமான்பாததாமரையுளம்பொருத்தி
வெருவறச்சிந்தித்தேனுமவன்றுதிவிரித்திட்டேனு
மொருவருமிரண்டுநீங்காதொண்மையினியற்றியேனும். (௮)

அறைபெரும்பத்திவாய்ந்தவருபத்துமூவராய
நிறையுடையரைத்துதிக்கினிகழுந்தற்றுதியின்மேலுங்
குறைவிலாமகிழ்ச்சியம்மான்கூருமற்றதனலந்த
முறையுடையரைச்சிந்தித்துமுனிவறத்துதிசெய்தேனும். (௯)

இடைவெளிதோற்றுருமலினிதடியெடுத்துவைத்து
மிடைதரமுக்காற்சூழல்விதிமேனுமியம்பாநிற்பர்
கடைபடுகுணுங்கேயாவன்கைகளைவீசிச்செல்லி
னுடையிராக்கதனுமார்பினுறப்பிணித்தடையின்மாதோ. (௧௦)

அஞ்சலிசெய்தருழினமரனேயாவனுலென்
றெஞ்சலில்சிவாகமங்களியம்பலினிந்தவாறே
மஞ்சவிர்கோயில்சூழ்ந்துமாண்டதண்டீசர்பாற்போய்த்
தஞ்சமென்றிருகைதட்டித்தரிசனபலனையின்று· (௧௧)

பெற்றனனடியேனென்றுபேசியஞ்சலித்தபின்ன
ரற்றமிலுமையாள்கோயிலடைந்துபசாரமாய
முற்றவுமுன்போலாற்றிமுனிவறநோக்கிப்போற்றிக்
குற்றமில்விபூதியோடுகுலவுசெஞ்சாந்துமேற்றே. (௧௨)

உறுவலமாகச்சூழ்போந்துயர்கொடிமரப்பாற்போந்து
மறுவிலட்டாங்கமாகவணக்கமோராங்காற்செய்து
பெறுமுறையாங்கமர்ந்துபிறங்கியமூலநூறு
மறுதிசெயகோரநூறுமடைவுறக்கணித்தல்வேண்டும். (௧௩)

சிவாலயதரிசனவிதிப்படலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் ௧௮௩.

# செபவிதிப்படலம்.

மருவியகுற்றம்போக்குமாண்புறுகழுவாய்நாளும்
பொருவருஞ்செபமேயாகும்பொருந்தியவதுசெயும்பாக்
கிருவகைநியாசமுஞ்செய்திமையவோரிடத்தின்வைகி
வெருவில்கண்மணிசெய்மாலைமேதகக்கோடல்வேண்டும். (௧)

ஆன்றவெண்பட்டுப்பாசத்தாறைந்துநான்குமூன்று
தோன்றவோர்முகம்வாய்த்துள்ளசுடர்மணியிணங்கச்சேர்த்துச்
சான்றவொண்முகத்தினோடுமுகம்புச்சத்தொடுசார்புச்ச
மென்றவொற்றுமைவிராவியியைதரக்கோத்தல்வேண்டும். (௨)

புத்திவேண்டிடின்மூவொன்பான்பொற்புறுமையைந்தாகு
முத்திவேண்டிடின்மாமேருமுனிவறவருச்சித்தேத்திச்
சித்திசான்மணியொலித்தல்செயாதுமற்றையர்களுக்கா
அத்திசாலனைத்திருக்குஞ்சதஞ்சதமுறைத்தல்வேண்டும். (௩)

அரும்புதன்பளிங்குமூன்றுப்பலவறைந்திடுதலுண்டால்
விரும்புகண்மணிக்குமேலால்விசேடமென்றெவருஞ்சொல்லார்
பெரும்புலமையினான்யோகிபிறங்கவுள்விடுதல்வேண்டுங்
கரும்புறழ்போகந்துய்ப்போன்புறம்விட்டுக்கணித்தல்வேண்டும். (௪)

மருவியபிராணவாயுவலஞ்செலக்கணித்தல்செய்யிற்
பொருவருமுத்தியெய்துமிடஞ்செலிற்போகமெய்தும்
வருசுழிமுனையிற்செல்லமந்திரித்திடுவானுக்கி
லருமையொன்றேனுமில்லாதனைத்தையும்பெறலாமன்றே. (௫)

தரைபுகழ்வலக்கையிற்றற்சனியின்மத்திமையின்மற்று
முரையநாமிகையிற்சேர்த்தேயொளிர்வடமங்குட்டத்தால்
வரையுறத்தள்ளின்வார்த்தைமந்தமானதமேயாகுங்
கரைசெயும்வார்த்தையாருங்கேட்பதாய்க்கழிந்ததன்றே. (௬)

தன்னுடைச்செவியின்மட்டேசார்வதுமந்தமாகு
மன்னுதன்மனத்தின்மட்டேமானதமாகுமென்ப
ருன்னுமிம்மூன்றனுள்ளுமொன்றினொன்றதிகமற்றுற்
பன்னுமானதமேகோடிபலஞ்செயுத்தமமாமென்பார். (௭)

எண்ணியேசெபித்தல்வேண்டும்பயனிலையென்றுவிட்டாற்
கண்ணியசெபமறந்தான்கணித்திடலிருமடங்கே
யண்ணியவதுதெரிந்தேயமைந்ததேனான்மடங்காம்
புண்ணியவடத்திற்காற்றுங்கழுவாயும்புகலக்கேண்மோ. (௮)

தருசிவலிங்கத்திற்குச்சாற்றியபரிகாரத்தி
லொருவறநான்குகூற்றிலொன்றுசெய்திடுதல்வேண்டும்
பெருவடமேருத்தாண்டிலாயிரம்பேசல்வேண்டுந்
திருவடமற்றகாலைச்செப்புகநூறுமன்றே. (௯)

முட்டிலவ்விலிங்கத்திற்குமொழிதருபரிகாரத்தி
லெட்டிலொன்றியற்றல்வேண்டுமேனையமாலைகட்குங்
கிட்டுபாத்தியநல்லாசமனமருக்கியங்கேடுற்று
லொட்டுகசதமொன்சாதம்புருடமீசானமோர்ந்தே. (௧௰)

உருண்டிடிலொடுக்கலற்றுலருக்கியமோரைஞ்ஞூறு
மருண்டிடாவிருநூறோராயிரமுடைந்தான்மாண்பாகுந்
தெருண்டவாவாகனாதியீரைந்துசெபிதுவாரத்
திருண்டிடாவருச்சித்தேத்தலினையுமைஞ்சுத்திபண்ணான். (௧௧)

சதமுறைகணித்தல்வேண்டுஞ்சாற்றவைபிறழினுன்னி
லிதமுறவதனிற்பாதியியதியாம்பண்டமின்றேற்
சுதமின்மஞ்சனங்குன்றுற்றுற்சொல்லுகமூலநூறு
பதநயிலாதிமுட்டிற்பன்னுகவிதயநூறு, (௧௨)

தூயவானந்தமுட்டிற்சொல்லுகவதனிற்பாதி
யாயசீரிலிங்கமாதிமுடிமிசையலர்குறைந்தான்
மேயபூவிரட்டியிட்டுவிளம்பிடவேண்டுநூறு
பாயவுரோமமாதிபூசித்தபண்டத்தெய்தில். (௧௩)

விழைபசுத்தருமைந்தாட்டிமுச்சதம்விளம்பல்வேண்டுங்
குழைவினீரயுதங்கூறுகோழைநீரிலிங்கந்தோயிற்
பிழையறவயுதமூன்றுபேசுககோழைதோயின்
மழைபுரைகளத்தான்மெய்யில்வடித்தநீர்க்கலசந்தீண்டில். (௧௪)

மருவவீரயுதங்கூறுவன்கரமாதியுற்றுப்
பொருவிலாறுருவசைந்தாற்புகல்கவையிருபதாங்கே
வெருவுறவிடம்பெயர்ந்தாலாயிரம்விளம்பல்வேண்டு
மொருதரஞ்சுழன்றன்மேலாவுரைத்ததற்கிரட்டிசெய்க. (௧௫)

ஆதனமீதுசாயின்மிகவுருண்டிடினுடுற்றுற்
போதமூன்றயுதஞ்சொல்கபொருவிலான்றிருமேனிக்கட்
பாதநூலியற்றுலோரயுதமாம்பாதமுற்று
லோதவீரயுதஞ்சாத்துமொளிகிளர்சாந்தமற்றால். (௧௬)

இருமடங்கியையச்சாத்தியீசானநூறுகூற
திருநிவேதனத்தூனத்தியுரோமங்கோதிசேரில்
வெருவிலோரயுதங்கூறுதெரியாதமேவினூறே
வருநிவேதனந்தான்றப்பிலிருநூறேடயுதமாண்பால். (௧௭)

சதம்பகர்தூபமாதிதருப்பணமாதிதப்பிற்
சதமதிற்பாதியாற்றறக்கதாமறந்துவிட்டா
லிதமிகுதூபங்குன்றினீசானநூறுபேச
லிதமறவிலிங்கமாழ்நீர்வீழினேர்கியுதமெண்ணி. (௧௮)

பின்புதாபித்தல்வேண்டுமொலியப்பிலத்தில்வீழ்ந்தால்
வன்புசானியுதங்கூறல்வளரிலிங்கங்கடந்தா
னன்பினீரயுதங்கூறலாதாரமின்றிவீழிற்
றன்புகூர்சாணேற்சொல்கசூழுமீரயுதமன்றே. (௧௯)

அறையுமாதாரமுண்டேலயுதமேயறைதல்சாலுங்
குறையுறமிருசாணுதிக்கிவ்வாறேயேற்றிக்கூறன்
மிறைகொளும்புருடமட்டேற்பரிகாரம்விளம்பார்யாரு
முறையமைபூசையோர்கான்முட்டினுமிரமேகூறல். (௨௦)

இருதினமாதிமுட்டினியைதரமுட்டுநாளுக்
கொருவிலாயிரத்தினேடுமூந்நூறோர்தினத்திற்கேற்றிப்
பெருகுறக்கணித்தல்செய்கபிறங்குநாண்மூவைந்தென்னில்
வெருவியீரயுதந்திங்களொன்னினுலயுதம்விள்க. (௨௧)

ஆண்டளவென்னிற்றிங்கடோறுமிரயுதமேற்றி
வேண்டுகொண்டிற்கப்பாற்றிக்கையால்வினையுஞ்சத்தி
பூண்டுசெய்பூசைமுன்னம்புரிந்திடில்வமனம்பண்ணி
யீண்டுநீர்படிந்துபூசையிருமடங்கியற்றிப்பின்னர். (௨௨)

உணவுகொள்ளாதுமூலமொருமையினயுதமெண்ணிப்
புணர்பரற்கற்றைநாட்போற்பொலிபலிசெய்வித்தீச
குணமிலாவலையர்முன்னோர்குறிக்கொளுமிலிங்கர்தொட்டா
லுணருமோரயுதங்காகமாதிக்கேரயுதமோதல். (௨௩)

நியநாய்க்கடுவானேனுக்கெற்றெளியவைந்தயுதஞானி
யாயதுதொட்டாலோர்மூன்றயுதமானேந்துமாட்டன்
மேயவந்தணர்தொட்டாரேல்விளம்புகசதமுச்சாதிக்
கேயவோரிரண்டுமூன்றுநான்கெண்ணிப்பலிநன்றீக. (௨௪)

நிவலைப்புண்டிலிங்கந்திகழ்காந்திருன்றுதாயி
றுவவென்றொழித்திடாமலயுதமூன்றேதனன்று
மேவவெந்திட்டதென்னில்வெறுக்குநாய்க்கெரிப்பான்றீண்டி
லோவவங்கொழித்துவேறுகொண்டொருநியுதமோதல். (௨௫)

அறிதருமிலிங்கங்கள்வராதியராற்கேடுற்று
லெறிபெருங்கவலைகூர்ந்தையெட்டுநாளுணவுநீத்துச்
செறிதரவுளத்தர்ச்சித்துத்தீங்கனியிளநீர்பாலே
குறிகொளவருந்தியண்ணலடியுளங்குறித்துவைகி. (௨௬)

கருதுபன்முயற்சியாலுந்தேர்ந்ததுகவர்ந்துகொண்டு
பொருவருஞ்சத்திசெய்துபூசைசெய்யகப்படாதேன்
மருவவேறிலிங்கங்கோடிபின்னர்வந்தடைந்ததென்னி
லொருவறவிரண்டும்வைத்துப்பூசனையுஞற்றன்மாண்பால். (௨௭)

பூசனையுபயோகத்துமறவிதான்புகுந்ததுண்டே
லாசறவிருநூறேதலன்னியன்றன்னிலிங்க
நேசமார்பூசைசெய்யினிகழ்த்துகவிரட்டிபூசை
தேசமைபருவகாலஞ்செயான்மூலநூற்றெட்டோதல். (௨௮)

ஆடிமுன்மூன்றிற்சாத்தும்பவுத்திரமணிதல்செய்யான்
கூடியவயுதத்தோடுநியுதமுங்கூறல்வேண்டு
நீடியவிரதமாற்றுங்கிரியைநன்னியமந்தப்பிற்
றேடியபொருள்சால்காயத்திரியைஞ்ஞூறுரைத்தல்வேண்டும். (௨௯)

போற்றியநித்தியாங்கிமுட்டுறிலரன்பூசைக்குச்
சாற்றியபடியேசெய்தலிறையொடுதழல்கெட்டானன்
காற்றியவேண்டுமுந்நாட்பட்டினியதனொடுஞ்சீர்
தேற்றியவுரைத்தல்வேண்டுந்திகழ்பதினாயிரந்தாம். (௩0)

என்றுமாயாதவங்கிமாய்தரவியையுமாயி
னன்றுபட்டினியடைந்தேயாயிரங்கூறல்வேண்டுந்
துன்றுபுத்தகமாசான்மேற்சொலுந்தன்றுளதியாதற்றுற்
கன்றுதலடைந்துதேம்பிக்கணிக்கவிரயுதமன்றே. (௩௧)

குருபரனிலிங்கம்வேடக்கொள்கையர்நிழல்கடந்தா
லொருமுந்நூறுணாத்தல்வேண்டுமுற்றகோவிளக்குமூர்த்தி
வருகுலத்தவர்தநீழல்கடந்திடில்வழுத்துநூறு
பொருவின்முத்திதனைநிந்தைபுகன்றிடிலயுதம்பத்தே. (௩௨)

போதகன்றனைநிந்திக்கினதிற்பாதிபுகறல்வேண்டுஞ்
சாதகன்றனைநிந்திக்கினதிற்பாதிசாற்றல்வேண்டு
மேதகுகுருவையேயினியுதமேவிளம்பல்வேண்டுந்
தீதகல்குருவைப்பூசித்திடறப்பினயுதமாமால். (௩௩)

அதுதெரியாமையென்னிலாயிரங்குருவைவெல்லக்
கதுமெனவெணிலைஞ்ஞூறாயிரமெதிர்கழறல்செய்யின்
முதுசமையியைமுன்னுனமூவனாயிகழிஞோனாம்
பதுசதமிரட்டியாகப்பிரமம்பன்னிடுதல்வேண்டும். (௩௪)

புத்தகமண்ணில்வீழிற்பூமியின்மிசைவைத்தோதி
லொத்தவன்கயிறுமண்ணிலுறில்விழிவளருந்தானஞ்
சித்தமிலசுத்தத்தானஞ்செறிதருமிறப்பில்வைத்தால்
வைத்தவைஞ்ஞூறகாமங்காமமேன்மற்றிரட்டி. (௩௫)

மிடியினனட்பாற்சாத்திரத்தைமந்திரத்தைவிள்ளி
லொடிவிலோராயிரஞ்சொலுறுமணலிலிங்கமிக்க
கடிமரகதவிலிங்கங்கணிகலிங்கஞ்சுயம்பு
படிசலவிலிங்கமாசான்பார்ப்பதிசெந்தீயோவம். (௩௬)

பெருகுபுத்தகமாதாக்கள்பிரதமைநிவேதனஞ்செய்
திருகில்பற்பலவுநாளுஞ்செறிநின்மாலியமாகாவா
முருகுமானிடவிலிங்கநிவேதனஞ்செய்ததோதிற்
கருகுமாலியமேயாகுமென்மனார்கற்றுளாரோ. (௩௭)

பரசிவன்பொருள்கவர்ந்தபாதகரிரட்டியீந்து
வரமிகுகிருச்சிரத்தைமாண்புறவியற்றல்வேண்டுந்
திரமுறவதிந்தேவெளவிற்சேரவைம்மடங்குநல்கி
விரவியகிருச்சிராதிபலவாற்றவினைதல்வேண்டும். (௩௮)

சிவதிரவியங்கவர்ந்ததியனாயுறவுசெய்தோ
ரவமுறப்பார்த்தோர்யாருமருநரகழுந்தநிண்ணங்
கவலறவவருந்தக்ககழுவாயேயாற்றல்வேண்டு
மிவர்செயலின்னதாகிலவர்செயலெற்றோதேறேம். (௩௯)

உற்றவெப்பிழைசெய்தாலுமுய்யலாமுபாயமுண்டு
பற்றலர்புரங்கண்மூன்றும்பாழ்படநகைத்தபெம்மா
னற்றமில்பொருள்கவர்ந்தபுலையருக்காகமங்கள்
சொற்றனவளவில்கற்பந்துயர்க்கொடுநரகத்தாழ்தல். (௪0)

உரைத்தவிவ்விதியைக்கொண்டேயுய்த்துணர்ந்துரைத்திலாத
வரைத்தபல்விதியுந்தேர்ந்துமாதேவன்பூசையாற்றித்
திரைத்தநீருலகிலென்றுஞ்செறிபழிபாவநீங்கிப்
புரைத்தவின்படையாநிற்பர்புகர்தபுமறிவுளாரே. (௪௧)

செபவிதிப்படலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - ௧௮௭௪.

# சமாதிவிதிப்படலம்.

அரியனைமுகுந்தன்வேதனடிமுடிதேடநீண்ட
பெரியனையுலகமுற்றும்பெற்றவள்கழைத்தோடோய்தற்
குரியனைவானோர்யாருமொருங்குகைகுவிக்குங்கண்டக்
கரியனைவெளியமேனிக்கண்ணுதற்பெருமான்றன்னை. (௧)

வல்லனையநாதிமுத்தசித்துருவாகிமன்று
நல்லனையொருமுச்சோவுநசித்திடவிளைத்தமேரு
வில்லனையனைத்துங்கூறும்வேதாகமங்களாய
சொல்லனைச்சொல்லிறந்தசுடர்வெளிப்பரப்பானனை. (௨)

எண்ணியவெண்ணியாங்கேயன்பருக்கியவல்ல
புண்ணியமூர்த்தியானைப்புவிமுதன்முப்பத்தாறு
நண்ணியவொன்றுத்தேவைநாமுமானந்தமுழ்கக்
கண்ணியகருணையானைக்காமனைக்காய்ந்துளானை. (௩)

தாழ்ந்தவர்தம்மையாருந்தாழ்ந்திடநோக்கியன்றே
சூழ்ந்தவல்வினையினோடுதொன்மலமுதலும்போக்கி
வீழ்ந்ததனுண்மைதேற்றிமேவரும்பரமானந்தத்
தாழ்ந்தவராகச்செய்யுமற்புதமூர்த்திதன்னை. (௪)

எழுதருபிராணவாயுவியங்கிருவழியுமாற்றிக்
கொழுவியநடுநாடிக்கட்கூட்டிப்புருவநாப்பட்
டொழுசுடர்மூன்றுமொவ்வாச்சுயம்பிரகாசமாக
வழுவறக்கண்டிரிற்றன்மாண்புறுசமாதியாமால். (௫)

சமாதிவிதிப்படலம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் - ௧௮௭௯.

# நைமிசமுனிவர்பூசித்தபடலம்.

இன்னணஞ்சூதமேலோனியம்பியவனைத்துங்கேட்டுத்
துன்னருமகிழ்ச்சிபொங்கிச்சுந்தரமுக்கண்மூர்த்தி
நன்னரொண்பாதங்காண்டற்கேதுநன்குகத்தேர்ந்தா
முன்னருமிதற்குமேன்மற்றொன்றிலையெனத்துணிந்து. (௧)

தொடங்கியமகமுடித்துச்சூதமாதவற்குச்செய்யு
மிடங்கொளுமுபசாரங்களென்பனவனைத்துஞ்செய்து
மடங்கழலனையாரோடுமாயூரஞ்சார்ந்துபோற்ற
வுடங்கெழுந்தனரக்கானமொருவினர்நடக்கலுற்றார். (௨)

குன்றமுங்காடுநாடுங்குளிர்கொள்பன்னதியுநீந்தி
நன்றமைசோழநாடுநண்ணினராங்காங்குள்ள
வென்றபஃறலமுநோக்கிமிக்கிறும்பூதுகொண்டு
மன்றநின்றாடுமையர்மாயூரம்புக்காரன்றே. (௩)

கற்பத்துஞ்சிதைதராதகௌரிமாமாயூரத்தின்
பொற்புற்றவெல்லையாம்யோசனையகம்பொலியாநின்ற
சொற்பெற்றதலங்களெல்லாந்துரிசறச்சென்றுசென்றாங்
கற்புற்றகுணத்திற்போற்றியடைந்தனரிடபதீர்த்தம். (௪)

திரையெறியிடபதீர்த்தஞ்சிறந்தநன்னாளினாடிப்
புரைதபுபாவநாசதீர்த்தமும்புக்குமூழ்கி
யுரைசெறிபிரமதீர்த்தமுதலியவுவந்துதோய்ந்து
தரைபுகழ்வெண்ணீறிட்டுக்கண்மணிதயங்கப்பூண்டு. (௫)

தூயவைந்தெழுத்துமெண்ணித்தொழுதகைதலைமேலேற
வாயபொற்கோயில்சூழ்ந்தேயகத்தியவாரணத்தை
மாயவன்முதலோர்தேருவள்ளலெம்பெருமான்றன்னை
நாயகமேயவஞ்சனாயகியென்னுந்தாயை. (௬)

சாற்றுமற்றுள்ளார்தம்மைத்தனித்தனிக்கண்டுபோற்றி
யூற்றுகண்ணருவிபாயவுரோமங்கள்சிலிர்ப்புமேவ
வீற்றுவீற்றாயபற்பறோத்திரமிகவிளம்பிக்
காற்றுவல்வினையராகிக்களித்திடுவாழ்க்கைபெற்றார். (௭)

பொருவருந்தீர்த்தமாடல்புராணனைச்சேவைசெய்தன்
மருவருந்தலம்வசித்தலிம்மூன்றும்வாய்த்தநீரா
லொருவரும்விருப்பராகியொள்ளியமாயூரத்தே
வெருவருமுனிவர்யாரும்வைகினார்விழைந்துபன்னாள். (௮)

திருந்தவிவ்வண்ணமேயதிருப்பெருமுனிவர்யாருங்
கருந்தடங்கண்ணாளஞ்சனாயகிகணவனாய
மருந்தனிவள்ளற்பெம்மான்வயங்கருள்விடைபெற்றேகி
பொருந்தநைமிசவனத்துப்பொலிவுறப்புக்காரன்றே. (௯)

புக்கவரயல்வனத்துப்புகுபவர்புகச்செலுத்தித்
தக்கநற்சூதற்றாழ்ந்துதவாவவனிருக்கையுய்த்து
மிக்கதமிருக்கைமேவிவிளங்குமாயூரநாதர்
நக்கசெம்பாதப்போதேநயந்துவாழ்ந்திருந்தாரன்றே. (௧௰)

இனிதமையிப்புராணமெழுதுவோரெழுதுவிப்போர்
கனிதரப்படிப்போர்கேட்போர்கற்பவர்க்குதவிசெய்வோர்
பனிமலர்கொண்டுபூசைபண்ணுவோராருத்தந்தேர்வோர்
நனிசெயுமருத்தஞ்சொல்வோர்நாடேமற்றிவர்களெல்லாம். (௧௧)

இம்மையின்மனைவிமைந்தரிருநிதியாதியோடு
செம்மையிற்பொலிவுவாய்ந்துதேவராய்த்தெய்வநாட்டுக்
கொம்மைவெம்முலையார்போகங்கூட்டுண்டுபின்னரஞ்ச
லம்மையோர்பாகத்தெம்மானருள்கலந்தின்பந்துய்ப்பார். (௧௨)

பொருவருமாயூரேசர்புராணத்தையெழுதிமையிட்
டொருவரும்பாசஞ்சார்த்தியொண்கவளிகைபொதிந்து
மருவரும்பீடமேற்றிவைத்துப்பூசிக்குமில்லத்
திருவருமுணராவள்ளலருளுறுமியிருக்குமன்றே. (௧௩)

பெருகுமம்மனையிற்பூதபிரேதபைசாசமாதி
யொருவும்வெங்கொடியநோய்களுண்ணுமைழவதனுக்கஞ்சுந்
தருமணிநியந்தேனுச்சார்ந்தொருங்கிருந்தாலொத்துப்
பொருவரிதாயவெல்லாச்சம்பத்தும்பொலியுமன்றே. (௧௪)

வேறு.

பார்பூத்தமாயூரநகர்வாழ்கவருள்வள்ளற்பரமன்வாழ்க
வேர்பூத்தகருந்தடங்கணஞ்சனாயகிவாழ்கவிவருக்கென்று
நார்பூத்தமனத்தன்பர்வாழ்கபெருஞ்சைவநெறிநன்குவாழ்க
சீர்பூத்தவம்பலத்துளானந்தநடநவில்குஞ்சிதத்தாள்வாழ்க. (௧௫)

நைமிசமுனிவர்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௧௮௧௪.

## மாயூரப்புராணம் முற்றிற்று.



# சூசிபத்திரம்.

## சூசிபத்திரம்.



# பிழைதிருத்தல்.

| பக்கம். | பாடல். | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௧௨ | ௬௨ | மன்னர் | மன்ளர் |
| ௧௪ | ௮0 | பலவகை | பலபகை |
| ௧௯ | ௯ | புன்னகனா | பொன்னகனா |
| ௨௬ | ௮௨ | சாமிகரம் | சாமீகரம் |
| ௩௩ | ௯ | அறைந்தாங் | அறிந்தாங் |
| ௪௮ | ௩௬ | அதையனைநோக்கி | அனையதைநோக்கி |
| ௫௬ | ௩௧ | தொடங்கன் | தொடங்கென் |
| ௬௪ | ௧ | வுனாயாதியி | வனாயாதியி |
| ௭௩ | ௪0 | மன்றநாப்பன் | மன்றனுப்பன் |
| ௭௮ | ௧௫ | சன்மமேசன்மம் | சன்மமெச்சன்மம் |
| ௮௯ | ௪௨ | சுவை | சுடர் |
| ௯௮ | ௯ | பரவி | பாவி |
| ௱௰௪ | ௧0 | கலங்காமல் | கலங்கமால் |
| ௱௰௫ | ௧௬-வரி | நாற்சிரோரடி | நாற்சீரடி |
| ௱௰௮ | ௭ | நதந்வனமதன்று | நந்தவனைதம்மு |
| ௱௩௬ | ௫ | வரைகளுந் | மறைகளுந் |
| ௱௪௩ | ௩௧ | வஞ்சினை | வஞ்சலை |
| ௱௫௪ | ௨௪ | யாகென்றான் | யாவென்றான் |
| ஷை. | ௨௫ | னவற்கருள் | னவாக்கருள் |
| ௱௭௧ | ௨௬ | பொரு | பொது |
| ௱௭௩ | ௧௧ | தருங்கற்ப | தருமகற்ப |
| ஷை | ௧௪ | டான | டான |
| ௱௭௪ | ௨௪ | வலக்க | வலக்கை |

யாகசங்காரப்படலத்தில் விடுபட்ட - ம் ஆவது செய்யுள்.

படையொடுபொலியெண்கையும்படுதழலெழுமுக்கண்ணுங்
கடையெழுகதிரும்வட்குங்காந்தியுமுரோமந்தோறு
மிடைதரவுதித்தவெண்ணில்பூதரும்விளங்கச்சிறி
யடையலர்நடுங்கவெங்களாண்டகையெழுந்தானன்றே.

## இந்நூலாசிரியரியற்றிய நூற்பெயரட்டவணை.

காழிக்கோவை.
திருவிடைமருதூருலா.
திருவானைக்காவகிலாண்டவம்மைபிள்ளைத்தமிழ்.
திருத்தவத்துறைப் பெருந்தவப்பிராட்டி பிள்ளைத்தமிழ்.
திருவுறந்தைக்காந்திமதியம்மைபிள்ளைத்தமிழ்.
திருப்பெருமணநல்லூர்த் திருநீற்றுமை பிள்ளைத்தமிழ்.
திருக்குடந்தைமங்களாம்பிகைபிள்ளைத் தமிழ்.
கன்னபுரப்பாகம்பிரியாள்பிள்ளைத் தமிழ்.
திருவெண்காட்டுப்பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ்.
திருவிடைக்கழிமுருகர்பிள்ளைத்தமிழ்.
திருவாவடுதுறையம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ்.
வாட்போக்கிக்கலம்பகம்.
துறைசைக்கலம்பகம்.
திருத்தில்லையமகவந்தாதி.
திருத்துறைசையமகவந்தாதி.
திரிசிராப்பள்ளியமகவந்தாதி.
திருக்குடந்தைத்திரிபந்தாதி.
திருப்பைஞ்ஞீலித்திரிபந்தாதி.
திருவானைக்காத்திரிபந்தாதி.
பட்டீச்சரப்பதிற்றுப்பத்தந்தாதி.
பூவாளூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி.
பாலவனப்பதிற்றுப்பத்தந்தாதி.
திருவூறைப்பதிற்றுப்பத்தந்தாதி.
தண்டபாணிபதிற்றுப்பத்தந்தாதி.
திருஞானசம்பந்தர்பதிற்றுப்பத்தந் தாதி.
எறும்பீச்சரம்வெண்பாவந்தாதி.
திருவானைக்காமாலை.
திருக்கலைசைமாலை.
திருவாவடுதுறைச்சுப்பிரமணியதேசிகர் மாலை.
தருமைச்சச்சிதானந்ததேசிகர்மாலை.
திருஞானசம்பந்தரானந்தக்களிப்பு.

### சோழநாடு.

திருவுறந்தைப்புராணம்.
திருக்குடந்தைப்புராணம்.
மாயூரப்புராணம்.
திருத்துருத்திப்புராணம்.
திருக்குறுக்கைவீரட்டப்புராணம்.
திருவாளொளிபுற்றூர்ப்புராணம்.
திருநாகைக்காரோணப்புராணம்.
விளத்தொட்டிப்புராணம்.
ஆற்றூர்ப்புராணம்.
திருவாரூர்த்தியாகராசர்லீலை.
தனியூர்ப்புராணம்.
மண்ணிப்படிக்கரைப்புராணம்.

### பாண்டிநாடு.

கோயிலூர்ப்புராணம்.
கண்டதேவிப்புராணம்.
சூரைக்குடிப்புராணம்.
வீரைவனப்புராணம்.

### தொண்டைநாடு.

திருமயிலைப்புராணம்.

### வடநாடு.

காசிரகசியம்.

### இவற்றுட்பதிப்பித்தன.

திருவானைக்காவகிலாண்டவம்மை பிள்ளைத்தமிழ்.
திருவுறந்தைப்பிள்ளைத்தமிழ்.
திருக்குடந்தைமங்களாம்பிகைபிள்ளைத் தமிழ்.
திருவாவடுதுறையம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ்.
துறைசைக்கலம்பகம்.
திருத்தில்லையமகவந்தாதி.
திருத்துறைசையமகவந்தாதி.
திருஞானசம்பந்தர்பதிற்றுப்பத்தந்தாதி
திருஞானசம்பந்தரானந்தக்களிப்பு.
மாயூரப்புராணம்.
தனியூர்ப்புராணம்.

---

### மற்றையவைபதிப்பிக்கப்படுவன.

இவைவேண்டியவர்கள் இந்நூலாசிரியரிடத்தும், இவர்மாணாக்கர்கள் கும்பகோணம் புரோவின்சியில் கல்லீஜ் தமிழ்ப்புலவர் தியாகராசசெட்டியாரிடத்திலும், சென்னைக்கவரன்மெண்டு நார்மல்ஸ்கூல் தமிழ்ப்புலவர் சோடசாவதானம் சுப்பராயசெட்டியாரிடத்திலும் விலைக்குவாங்கிக்கொள்ளலாம்.

## சிறப்புப்பாயிரம்.

### மாயூரம் நமச்சிவாயம் பிள்ளை குமாரர் முத்துச்சாமி பிள்ளை இயற்றியது

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சீரிருக்குமறைமுடியுந்தொடர்வரியமாதேவன்செழும்பூங்கொன்றைத்
தாரிருக்குஞ்சடைவள்ளலருளபையாம்பிகையோடுந்தயங்கிமேவுங்
காரிருக்கும்பொழிற்கவுரிமாயூரமான்மியந்தேன்கசிந்துமல்கு
மேரிருக்குந்தமிழின்மொழிபெயர்த்துப்பன்னயஞ்செறிவித்தியம்பினனால். (க)

இலங்குறுமெய்ஞ்ஞானகலைமுதலியபல்கலையுணர்ச்சியேய்ந்துதூய
நலங்குலவுபொறைவாய்மையருளடக்கமுறவாய்ந்துநலத்தினின்றும்
விலங்குறுமென்னையுந்தனதுமெய்யடியார்குழுவினிடைமேவச்சேர்த்தோன்
வலங்குலவுசிரகிரிவாழ்மீனாட்சிசுந்தரநாவலவரோறே. (உ)

~~~~~~~~~~~~

### திருத்துறைப்பூண்டியிலிருக்கும் முத்தம்மாள்புரச்சத்திரம் கோபாலபிள்ளை இயற்றியது

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சீர்பூத்தமயிலாடுதுறைத்தளிமேவருட்பெருமான்சீர்த்தியாய
பேர்பூத்தமான்மியமாம்வடமொழியைத்தென்மொழியாற்பிறங்கச்செய்தான்
பார்பூத்தஞானகலைமுதற்பலவுமுணர்ந்துபுகழ்பரந்துமேய
வார்பூத்தசிரகிரிவாழ்மீனாட்சிசுந்தரநாவலவரோறே. (க)

மாலாதில்லறத்தமர்ந்துதுறவறத்தார்புகழவருண்மாண்புபூண்டு
பாலோடுதேன்கலந்ததெனத்தளிகடொறுஞ்சென்றுபதிகஞ்சொற்ற
வாலாலசுந்தரமேமீனாட்சிசுந்தரப்பேரமையவாய்ந்து
தோலாதமாயூரப்புராணமொழிபெயர்த்தனனேற்சொல்வதென்னே. (உ)
~~~~~~~~~~~~